# தமிழர் திருமணம்

சேலம் நகராண்மைக் கல்லூரித்
தமிழ்த்துறைத்தலைவன், பேராசிரியன்
பண்டித புலவ வித்துவ
**ஞா. தேவநேயன்** (எம். ஏ.)
எழுதியது

வெளியீடு
திருவள்ளுவர் தவச் சாலை
திருவளர்குடி (அல்லூர்),
திருச்சிராப்பள்ளி மாவட்டம்,
620 101.

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | தமிழர் திருமணம் |
| பதிப்பு ஆண்டு | : | 1997 |
| நூலின் ஆசிரியர் | : | ஞா. தேவநேயன் (எம்.ஏ.) |
| விலை | : | உருபா 20/- |
| வெளியீடு | : | திருவள்ளுவர் தவச்சாலை<br>திருவளர்குடி (அல்லூர்)<br>திருச்சிராப்பள்ளி மாவட்டம்<br>620 101. |
| கணிப்பொறி அச்சு | : | ஈகவர் லேசர்,<br>சென்னை . 18. |

# புகு வாயில்

மொழி ஞாயிறு பாவாணர் வாழ்வில் பொற்காலம் என அவராலேயே சொல்லப்பட்டது சேலம் நகராண்மைக் கல்லூரியில் அவர் பணி செய்த காலமாம். அக்காலத்தில் செய்யப்பட்ட அரிய நூல்களுள் ஒன்று 'தமிழர் திருமணம்' என்னும் இந் நூலாம்.

அளவால் சிறியதும் பொருளால் அரியதும் ஆகிய இந்நூலின் முன்னுரை மணவாழ்வுச் சீர்மைக்கு இன்றியமையாத அறுவகைப் பொருள்களை அமையக் கூறுகின்றது.

நூல், பண்டைத் தமிழ்மணம், இடைக்கால மாறுதல், திருமணச் சீர்திருத்தம் என முப்பகுப்பு உடையதாய்ப் பல்வேறு குறுந்தலைப்புகளில் நடையிடுகின்றது.

பின்னிணைப்பு, திருமணச் சார்புக் குறிப்புகளும், சான்றுகளுமாய் ஏழனைக் கொண்டு இயல்கின்றது.

1956 இல் இந்நூலை வெளியிட்டவர் பாவாணர் அவர்கள் திருமகனார் நச்சினார்க்கினிய நம்பி. அவரை வெளியிட ஊக்கியவர் புலவர் திரு. குற்றாலம். நூலுரிமை திருவாட்டியார் நேசமணி தேவநேயனார்க்கு. சேலம் கூட்டுறவு அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

பாவாணர் நூல்கள் அனைத்தும் நாட்டுடைமை ஆக்கப்பட்ட நற்பேற்றால் திருவள்ளுவர் தவச்சாலையின் வெளியீடாகத் தமிழர் திருமணம் வெளிப்படும் பேறு பெற்றதாம். நூலாசிரியர்க்குப் போலவே, நூலை நாட்டுடைமை ஆக்கிய தமிழ் நாட்டு அரசுக்கும் ஒருசேரத் தவச்சாலை நன்றியுடையதாகின்றது.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"

என்னும் வள்ளுவ மனையற மாட்சியும் நன்மக்கட் பேறும் நாடு பெற்றுத் திகழ இந்நூல் தூண்டலாக அமைய வேண்டும் என்னும் விருப்பால் இந்நூலைத் தவச்சாலை வெளியிடுகின்றது.

திருக்குறளை ஓதியே மணமங்கல விழா நிகழ்த்தும் முறையைக் கொண்டது குறளாயம்! அது நாடெல்லாம் நாளெல்லாம் நடைபெற்று ஒளிசெய்யும் இந்நாளில், பாவாணரின் இந்நூல் வரவு பேரொளிச் சான்றாய்த் திகழும்.

குறளிய குறளாய அமைப்பாளர் வேலா வாழ்ந்த காலம். தி.பி. 17 . 9. 2021 (கி.பி. 3.10.90). உடுமலைப்பேட்டையில் நிகழ்ந்த நிலவுக்கூட்டம். அக் கூட்டத்தைக் கூட்டியவரும் ஆங்கிலப் பேராசிரியரும் அருந்தமிழ்த் தொண்டரும் ஆகிய திரு.பொ. பொன்னரசனார் வரவேற்புரைத்தார். அந் நிகழ்ச்சியைக் குறளியம் 11:4 தாங்கிவந்தது:

"திரு. பொன்னரசனார் இனிய வரவேற்புரை வழங்கினார். அவ்வுரையில் பாவாணர், பெரியார், மறைமலையடிகளார் முதலானோர் தமிழ் நலங்கருதிய பாங்குகளும் தொண்டுகளும் பகர்ந்து, நம் மறையாக நிற்க வேண்டிய திருக்குறட் பெருமையும் தெரிவித்து, மொழிவளர்ச்சி தனித்தமிழ் வளர்ச்சியைத் தழுவி நிற்பதும் காட்டி, அதற்கெனத் தாம் தொடங்கும் அறக்கட்டளை பற்றிய விளக்கம் அறிவித்துத் திரு. கண்ணனார் தம் கைகளால் இலக்கியச் செம்மலும் குறளாய இணை அமைப்பாளருமான திரு. இளங்குமரனாரிடம் உருபா ஐயாயிரத்துக்கான வங்கி வரைவோலையை வழங்கித் தாயின் நினைவைச் செய்து நிறைவேற்றினார்" என்பது.

ஓங்கி உயர்ந்து ஒன்றிய பொன்னரசர் கொடைப்பொருள் அவர்தம் தவத்தாயரின் கொடையாகத் தமிழுலகில் தவழ வேண்டும் என்னும் ஆர்வம் பல்லாண்டுகளாக உந்திநிற்க, அதற்குப் பாவாணர் இயற்றிய, இத்தமிழர் திருமணம் வெளியிடல் தகவாம் எனக் கொண்டு அத்தமிழ்த் தாய் திருப்படையலாய் நன்றியுடன் வெளியிடப்படுகின்றது.

இதனை எழிலுற அச்சிட்டுத் தரும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட நன்நெஞ்சர் 'ஈசுவர்' ஒளியச்சகத்தார். அவர்களுக்குத் தவச்சாலையின் நன்றியும் வாழ்த்தும் உரியன.

வாழிய நலனே! வாழிய நிலனே! இன்பமே சூழ்க.

| | |
|---|---|
| திருவளர்குடி (அல்லூர்) | இரா. இளங்குமரன் |
| திருச்சிராப்பள்ளி மாவட்டம் | நிறுவனர், திருவள்ளுவர் |
| 620 101. | தவச்சாலை |

# படையல்

பேராசிரியர் பொ. பொன்னரசனாரின் அருமை அன்னையார் திருவாட்டி அரசமணியார், திண்டுக்கல்லை அடுத்த குட்டத்து ஆவரம்பட்டியில் பிறந்தவர். கழகப் புலவர்களாய்த் திகழ்ந்த இளம்பாலாசிரியர் போன்ற ஆசிரிய நிலை எய்தினார்! உளத்தாலும் பணியாலும் ஒத்த இளம்பாலாசிரியர் பொன்னையனாரை மணந்து மங்கல மனையறம் எய்தினார். மக்கள் இருவரைப் பெற்றார்! மூன்றே ஆண்டு கொண்ட இல்லற வாழ்வுக்குப்பின்னர்ப் பொன்னையனார் இயற்கை எய்த, அரசமணியாரே தந்தையும் தாயும் ஆனாராய்க் குடி தாங்கி நின்றார்! பிள்ளைகளை ஆளாக்கிப் பெற்றவர் கடமையை ஆற்றியதோடு, தம் தனிப்பெரும் ஆர்வத்தாலும் பயிற்சியாலும் பிற சொற் கலவாப்பெருநிலை ஆசிரியராய்த் திகழ்ந்தார். நாளெல்லாம் நம் மறையாம் திருக்குறளை ஓதுதலை மேற்கொண்டார். 9. 10. 1989 இல் பேராப் பெருநிலையுற்றார். அவர்க்குப் பாவாணர் அருளிய தமிழர் திருமணம் என்னும் அரும்பெரும் மாலையைச் சூட்டிப் படையலாக்கி மகிழ்கின்றோம்.

**திருவள்ளுவர் தவச்சாலையர்**

**15 . 8. 1997.**

# உள்ளடக்கம்

| | பக்கம் |
|---|---|
| முகவுரை : | 9 |
| முன்னுரை : | |
| 1. வாழ்க்கை நோக்கம் | 11 |
| 2. வாழ்க்கை வகை | 12 |
| 3. இல்லறச் சிறப்பு | 13 |
| 4. திருமணமும் கரணமும் | 14 |
| 5. மணமக்கள் பெயர் | " |
| 6. அன்புங் காதலுங் காமமும் | 15 |
| நூல் : | |
| I பண்டைத்தமிழ் மணம் | 17 |
| 1. மணவகை | 18 |
| (1) உலகியற் பாகுபாடு | " |
| i. கொள்முறை பற்றியது - (1) கொடை | " |
| (2) காதல் | 21 |
| (3) கவர்வு | 25 |
| ii. குலமுறை பற்றியது | 25 |
| iii. மணமக்கள் தொகை பற்றியது | 27 |
| iv. மணமகள் நிலை பற்றியது | 28 |
| (2) இலக்கணப் பாகுபாடு | " |
| 2. மணத்தொகை | 30 |
| 3. மணநடைமுறை | 31 |
| (1) மணப்பேச்சு | " |
| (2) மணவுறுதி | 32 |
| (3) மணவிழா- i. முன்னிகழ்ச்சிகள் | 33 |
| ii. கரணம் | 34 |
| iii. பின்னிகழ்ச்சிகள் | 35 |
| II இடைக்கால மாறுதல்கள் | 40 |
| 1. பிராமணப்புரோகிதமும் வடமொழிக்கரணமும் | " |

2. குலக்கட்டுப்பாட்டு மிகை 45
3. பொருந்தாமணமும் வீண் சடங்கும் "

III திருமணச் சீர்த்திருத்தம் 48
1. சீர்திருத்த இயக்கம் 48
2. பெற்றோர் கவனிக்க வேண்டியவை 49
(1) பால்நிலை கவனித்தல் 50
(2) பன்னிரு பொருத்தம் பார்த்தல் 50
(3) குலவெறி கொள்ளாமை 55
(4) பரிசம் வாங்காமை 56
(5) நாளும் வேளையும் பாராமை 57
(6) பிறப்பியம் பாராமை 60
(7) மணம்பற்றிய செய்திகளைத் திட்டமாய் முடிவு செய்துகொள்ளுதல் 61
(8) தாய்மொழியிற் கரணம் செய்வித்தல் 61
(9) வீண் சடங்கு விலக்கல் 61
(10) செல்வநிலைக்கேற்பச் செலவு செய்தல் 62
(11) மணநாளன்றே மணமக்களைக் கூட்டுதல் 63
(12) மணமக்களின் நல்வாழ்வை விரும்பல் 63
3. மணமக்கள் கவனிக்கவேண்டியவை 64
4. உற்றார் உறவினர் கவனிக்கவேண்டியவை 64
5. அரசியலார் கவனிக்கவேண்டியவை 65
6. புதியன புகுதல் 66
7. போலிச் சீர்திருத்த மணங்கள் 66
8. பெண்டிர் சமன்மை (சமத்துவம்) 67

பின்னிணைப்பு:-
1. திருமண அழைப்பிதழ் 69
2. திருமண நிகழ்ச்சி நிரல் 76
3. திருமணத் தமிழ்க்கரணம் 76
4. கரணத்தொடர்பான சில சீர்திருத்தக் கருத்துக்கள் 79
5. திருமண வாழ்த்திதழ் 80
6. 'தாலிகட்டும் வழக்கம் தமிழரதே' 82
7. மலையாள நாட்டு மணமுறை 86

# நூலாசிரியன் முகவுரை

இல்லறமாகிய நல்லறம் பூணும் மக்கள் வாழ்க்கையில் திருமணமே தலைசிறந்த மங்கல நிகழ்ச்சியாதலாலும், நீண்ட காலமாகத் தமிழுக்கும் தமிழனுக்கும் இழுக்குநேரும் வண்ணம் ஆரியமுறையில் பெரும்பால் தமிழ மணங்கள் நடைபெற்று வருவதாலும், அண்மையில் யான் நடத்திவைத்த பல திருமணங்களில் யான் உணர்ந்த குறையை நிறைத்தற் பொருட்டும், இந்நூல் எழுதப்பெற்றது.

சேலம்,<br>15-5-'56.

ஞா. தேவநேயன்

# முன்னுரை

## 1. வாழ்க்கை நோக்கம்

இவ்வுலகிற் பிறந்த ஒவ்வொருவரும் ஒரு சிறிதேனும் இன்பமாய் வாழ விரும்புவதாலும், அவ் இன்பத்திற்கு இன்றியமையாது வேண்டுவது பொருளாதலாலும், அப்பொருள் பெற்றார் செய்யவேண்டிய கடமை அறமாதலாலும் இம்மையில் மக்கள் வாழ்க்கைக் குறிக்கோள் இன்பமும் பொருளும் அறமும் என மூன்றாகக் குறித்தனர் முன்னோர். இம் மூன்றனுள்ளும், அறம் சிறந்ததாயும் ஏனையிரண்டிற்கும் பொது வாயுமிருத்தலான், அறவழியில் ஈட்டிய பொருளைக்கொண்டு அற வழியில் இன்பந் துய்க்கவேண்டுமென்னும் கருத்தால், அறத்தை முன் வைத்து முப்பொருளையும் அறம் பொருள் இன்பம் என மாற்றி யமைத்தனர் பின்னோர்.

ஒருவர்க்கு ஊண் இசை காட்சி முதலிய பிறவற்றாலும் இன்பமுண்டாகுமேனும், பேரளவுபற்றியும் ஐம்புலனுந்தழுவல் பற்றியும், பெண்ணின்பமே இம்மையிற் பேரின்பமாகக் கொள்ளப்பெற்றது.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்". (54)

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள". (1101)

எனத் திருவள்ளுவனாருங் கூறியிருத்தல் காண்க.

மக்களிடை மதத்துறை வளர்ச்சியடைந்து வீடுபேற்று நம்பிக்கை ஏற்பட்டபின், மாந்தன் குறிக்கோள் அல்லது பேறு அறம்பொருள் இன்பம் வீடு என நான்காக வகுக்கப் பெற்றது. இந்நான்கும் நாற்பொருள் அல்லது நான்மாண் பொருள் எனப்படும்.

இம்மையின்பமாகிய பெண்ணின்பமும் மறுமையின்ப மாகிய வீட்டின்பமும், ஒப்பு நோக்க வகையால், முறையே, சிற்றின்பம் பேரின்பம் எனப்படினும், சிற்றின்பமே இயற்கைக் கேற்றதும், உடனே நுகர்தற் குரியதும், எளிதாய்க் கிட்டுவதும், கண்கூடாகக் காணப்பெறுவது மாயிருத்தலின், அதுவே பெரும்பாலரால் விரும்பப்படுவதாம்.

"ஈதல்அறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காதல் மனையாளும் காதலனும்— தீதின்றிப்
பட்டதே இன்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு".

என்னும் ஔவையார் செய்யுள், நாற்பொருளியல்பையும் நன்கனம் தெரிவிக்கும். இச்செய்யுளின் முதலடியை, "ஈதலறம் தீவினைவிட் டீட்டல் பொருளென்றும்" என்று சிலர் திருத்துவர்.

சில துறவியர், வரையிறந்து பெண்ணை வெறுத்துப் பெண் ணின்பத்தைப் பழித்திருப்பர். அது துறவியர்க்கே கூறியதென்று இல்லறத்தார் பொருட்படுத்தாது விட்டு விடல்வேண்டும். விலை மகளுறவையும் நெறி திறம்பிய காம நுகர்ச்சியையும் பழிக்கலாமேயன்றி, பெண்ணின்பந்தன்னையே பழித்தல் கூடாது. அங்ஙனம் பழிப்பவர், இறைவன் ஏற்பாட்டையும் தம் பெற்றோர் வாழ்க்கையையும் பழிப்பவரேயாவர்.

## 2. வாழ்க்கை வகை

மாந்தன் வாழ்க்கை, இல்லறம் துறவறம் என இரு வகைத்து. மனைவியோடு கூடி இல்லத்திலிருந்து, அதற்குரிய அறஞ்செய்து வாழும் வாழ்க்கை இல்லறம்; உலகப்பற்றைத் துறந்து, அதற்குரிய அறத்தோடு கூடிக் காட்டில் தவஞ் செய்து வாழும் வாழ்க்கை துறவறம். அது மணவாநிலையிலும் தொடங்கலாம்; மணந்த நிலையிலும் தொடங்கலாம்.

ஒருவன் மணஞ் செய்யாது இறுதிவரை மாணியாய் (பிரமச்சாரியாய்) இருப்பினும், அவன் வாழ்க்கை இல்லறத்தின் பாற்படும்.

ஒருவன் நாட்டினின்று நீங்கிக் காட்டில் வாழினும், மனையாளொடு கூடி வாழின், அது இல்லறத்தின் பாற்படுவதே.

ஒருவன் இல்லத்திலிருந்து மனையாளொடு கூடி வாழினும், அறஞ்செய்யாது இருப்பின், அவன் வாழ்க்கை இல்லறமாகாது வெறுமனான இல்வாழ்க்கையாம். ஒருவன் துறவு மேற்கொண்டும் அதற்குரிய அறம் பூணானாயின், அது ஈரறத்தொடுங் கூடாது தீவினையை மிகுக்கும் அல் வாழ்க்கையாம்.

இக்காலத்தில், துறவு பூண்டோர் காட்டிற்குச் செல்லாது நாட்டிலும் நகரத்திலும் தங்கி, தம்மாலியன்றவரை பொது மக்கட்குத் தொண்டு செய்வது, சிறந்த துறவாகக் கருதப்படுகின்றது.

### 3. இல்லறச் சிறப்பு

இறைவன் ஏற்பாட்டின்படி மக்களுலகம் இடையறாது தொடர்ந்து வருவதற்கு இல்லறமே காரணமாதலாலும், துறவியர்க்கும் அவர் முற்றத் துறக்கும்வரை இன்றியமையாத் துணையாயிருப்பது இல்லறத்தாரே யாதலாலும், இல்லறத்தாலும் வீடுபேறு கிட்டுமாதலாலும், மாயமால நடிப்பிற்கிடம் துறவறத்தினும் இல்லறத்திற் குறைதலாலும், இல்லறமே நல்லறமாம். இதனாலன்றோ,

"இல்லற மல்லது நல்லற மன்று".

என ஒளவையாரும்,

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று". (49)

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்". (46)

என்று திருவள்ளுவனாரும், கூறினார் என்க.

அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, என்பன இல்லற வாழ்க்கைக்கு விதிக்கப்பட்ட அறங்களாதலின், இவையனைத்தையுங் கைக்கொள்வார் வீட்டுலகை யடைதற்கு எள்ளளவும் ஐயமின்றாம்.

ஆயினும், மக்கள் தொகை மிக்கு மாநில முழுதும் இடர்ப்படும் இக்காலத்தில், துறவறஞ்சிறந்ததென்று கூறித் துறவியரை ஊக்குதல் வேண்டும் என்றே தோன்றுகின்றது.

## 4. திருமணமுங் கரணமும்

ஓர் ஆடவனும் ஒரு பெண்டும், கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேர்வதே மணமாம். மணத்தல் கலத்தல் அல்லது கூடுதல். மணவாழ்க்கைக்கென்றே இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய்ப் படைத்திருப்பதாலும், அதனிடத்து மிகுந்த அறப்பொறுப்புள்ளமையாலும், அது ஆயிரங்காலத்துப் பயிர் ஆகையாலும், வாழ்க்கைத் துணைவர் இருவரும் தெய்வத்தின்முன் அல்லது தெய்வத்தின்பேரில் பலரறிய ஆணையிட்டுக் கூடுவதாலும், மணம் தெய்வத் தன்மை பெற்றுத் திருமணம் எனப் பெற்றது. இப் பெயர், பின்னர், திருமணத் தொடர்பான விழாவையுங் குறித்தது.

திருமணத்திற்குரிய ஒப்பந்த அல்லது தாலிகட்டுச் சடங்கு கரணம் எனப்படும். கரணம் செய்கை, அது ஆட்சி பற்றிச் சடங்கை உணர்த்திற்று. கரணத்தோடு கூடிய திருமணத்தை வதுவை மணம் என்பது இலக்கிய வழக்கு.

முதற் காலத்தில், எல்லா ஆடவரும் பெண்டிரும், பருவம் வந்தபின் விலங்கும் பறவையும்போலக் கரணமின்றியே கூடி வாழ்ந்து வந்தனர். ஆயின், சில ஆடவர், தாம் மணந்த மகளிரை மணக்கவில்லையென்று பொய்யுரைத்தும், அவரைக் கைவிட்டும், அவர் வாழ்வைக் கெடுத்து வந்ததினால், மக்கள் மீது அருள்கொண்ட தமிழ முனிவர், கரணம் என்னும் திருமணச் சடங்கை ஏற்படுத்தினர். மணமகன், மணமகளைத் தன் நிலையான வாழ்க்கைத் துணையாகக் கொள்வதாக, பலரறியக் கடவுள் திருமுன் சூள் (ஆணை) இடுவதே கரணமாம்.

> "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப".

என்பது தொல்காப்பியம் (கற்பியல், 4).

## 5. மணமக்கள் பெயர்

கணவனும் மனைவியுமாக ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணைவராய் இல்லறந் தொடங்கும் இருவரும், திருமணத்தன்று மணமக்கள் எனப்படுவர். அவ்விருவரையும் பிரித்துக் கூறுங்கால்,

மணமகன் மணமகள் என்றும், மணவாளன் மணவாட்டி என்றும், பெண் மாப்பிள்ளை (மணவாளப் பிள்ளை) என்றும், பெண் பிள்ளை என்றும், கூறுவது வழக்கம். மணமகனைப் பிள்ளை என்பது வடார்க்காட்டு வழக்கு.

கணவன் மனைவி, ஆண்மகன் பெண்டாட்டி, அகமுடையான் அகமுடையாள், இல்லாளன் இல்லாள் என்னும் பெயரிணைகள் திருமணத்திற்குப் பின்பு இல்லறக்காலத்தில் நிலையாக வழங்குவன. மணாட்டுப்பெண் என்பது முறையே மாட்டுப்பெண் நாட்டுப்பெண்என மருவி, மருமகள் என்னும் பொருளில், தஞ்சை வட்டாரத்தில் வழங்கி வருகின்றது. தலைவன் தலைவி, தலைமகன் தலைமகள், கிழவன் கிழத்தி (நாடு கிழவோர்) என்பன, அரசக்குலத்தார்க்குரியனவாய், இல்லறம் நெடுகலும் வழங்கும் இலக்கிய வழக்காம். இவற்றுள், கிழவன் கிழத்தி என்பன மனைக்கிழவன் மனைக்கிழத்தி என்னும் வழக்கில் பொது மக்கட்கும் வழங்கும். மனைக்கிழத்தியை வாழ்வரசி என்பது நெல்லை நாட்டு நல்வழக்கு.

திருவள்ளுவர், கணவனுக்குத் தலைமை தோன்ற மனைவியை வாழ்க்கைத் துணையென்று கூறியிருப்பினும், இல்லறத்தை "இரு பகட்டொரு சகடு" என்றும், கணவன் மனைவியர் காதலொற்றுமையை "ஓராவினுக் கிருகோடு தோன்றினாற்போல்" என்றும், உவமித்துக் கூறும் வழக்கிற்கும், இக்காலத்தோங்கிவரும் சமநிலைக் கருத்திற்கும், ஏற்ப, இருவரையும் தனித்தனி வாழ்க்கைத் துணையென்றோ, வாழ்க்கைத் துணைவன் வாழ்க்கைத் துணைவி என்றோ, குறிப்பது குற்றமாகாது.

## 6. அன்பும் காதலும் காமமும்

அன்பு காதல் காமம் என்பன, பருநோக்கில் ஒன்றாயினும், நுண்ணோக்கில் வேறுபட்டன.

அன்பென்பது, ஏசுவும் புத்தரும் போல் எல்லாரிடத்தும் காட்டும் நேயம். அது அறமாகவும் அறவினைகட்கெல்லாம் காரணமாகவும் கருதப்படும்.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு".

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது".

என்னும் குறள்கள் (72,45) இதை யுணர்த்தும்.

காதல் என்பது, ஒருவரையொருவர் இன்றியமையாக் கழிபெரு நேயமாய் இருவரிடை நிகழ்வது. அது, கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் போலும் நண்பரிடத்தும், பெற்றோரும் பிள்ளையும் போலும் உறவினரிடத்தும், பூதப்பாண்டியனும் அவன் தேவியும் போலும் கணவன் மனைவியரிடத்தும், அமைவது, அது அரிய பிறவிக் குணம்.

கோவலனும் கண்ணகியும் இறந்தமை கேட்ட தாய்மார் உடனுயிர் துறந்தமை காண்க. கணவன் மனைவியரிடைப்பட்ட காதல் உண்மையில் இருவர்க்கும் பொதுவேனும், அது சிறப்பாக மனைவிக்கே அல்லது மனைவியர்க்கே உரியது என்னும் தவறான கொள்கை, தொன்றுதொட்டு இருந்து வருகின்றது.

காமம் என்பது, கணவன் மனைவியரிடத்தேயே அல்லது ஆண் பெண் என்னும் இருபாலிடையேயே, நிகழக்கூடிய சிறப்புவகை நேயம். கணவன் மனைவியர் இல்லற வின்பம் துய்த்தற்குக் காரணமான நேயம் என்னும் பொருளிலேயே காமம் என்னுஞ் சொல்லை ஆண்டு, இன்பத்துப் பாலைக் காமத்துப்பால் எனக் குறித்தனர் வள்ளுவர். அச் சொல், இன்று கலவி வேட்கை என்னும் தவறான பொருளில் வழங்கி வருகின்றது.

இனி, அருள் என்பது யாதோவெனின், அது உயர்ந்தோர் தாழ்ந்தோரிடத்துக் காட்டும் இரக்கம் என்க.

# தமிழர் திருமணம்

## I பண்டைத் தமிழ் மணம்

பண்டைத் தமிழ் மணம் என்று இங்குக் குறிக்கப் பட்டவை, தமிழகத்தில், தொன்றுதொட்டுப் பிராமணர் பெருந்தொகையாய் வந்து பலவூர்களிலும் தங்குமளவும், தமிழப் பார்ப்பாராலும் குலத் தலைவராலும் தமிழில் நடத்தப்பெற்று வந்த மணங்களாகும்.

பிராமணர் தென்னாடு புகத்தொடங்கியது ஏறத்தாழக் கி.மு.2000 எனினும், அவர் முதலடியிலேயே பெருந் தொகையினராய் இங்கு வந்தவரல்லர். முதன்முதல் இங்குக் கால் வைத்த பிராமணர் விரல்விட்டு எண்ணத்தக்கவரே யாவர். கிறித்தவ வூழி தொடங்கும்வரை இடையிட்டிடையிட்டுச் சிறு சிறு கூட்டத்தாராகவே அவர் வந்து கொண்டிருந்தனர். கி.பி. 3 ஆம் நூற்றாண்டிற்குப் பின், பல்லவ அரசர் காலத்தில்தான், அவர் பெருவாரியாக வடநாட்டிலிருந்து குடியேற்றப் பட்டனர். இதைப்பிற்காலச் சேரசோழ பாண்டியரும் பின்பற்றினர்.

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" என்று சிலப்பதிகாரம் பிராமண அல்லது ஆரியப் பார்ப்பனப் புரோகிதத்தைக் குறித்திருப்பது, கடைச்சங்கக்காலத்தில் நகரங்களிலும் மாநகரங்களிலும் பெரும்பாலும் அரசரிடையும் வணிகரிடையும் இருந்த நிலைமையைத்தான் குறிக்கும். இன்றும் பிராமணரில்லாத பல நாட்டுப்புறத்தூர்கள் இருப்பதாலும், சில தமிழக்குலத்தார் பிராமணப் புரோகித மின்றித் தம் மணங்களை நடத்திக் கொள்வதாலும், பிராமணர் வந்தபின்பும், கடைச்சங்கக் காலம்வரை பெரும்பால் தமிழர் மணங்கள் தமிழ்மரபிலேயே நடந்துவந்தன என்று அறிதல் வேண்டும்.

தமிழப்பார்ப்பார், பண்டாரம், புலவன், குருக்கள், திரு(க்கள்), பூசாரி, உவச்சன், ஓதுவான், போற்றி, நம்பி, அருமைக்காரன் (புடவைக் காரன்), வள்ளுவன் முதலிய பல்வேறு வகுப்பார் ஆவர். பார்ப்பான் கோயிற் கருமங்களைப் பார்ப்பவன்.

அந்தணன் ஐயன் என்னும் பெயர்கள் முதன்முதல் தமிழத் துறவியரையே குறித்ததுபோன்று, பார்ப்பான் என்னும் பெயரும் முதன்முதல் தமிழப் பூசாரியையே குறித்தது. துரை என்னும் தமிழ் அல்லது தெலுங்கச் சொல் நம் நாட்டில் தங்கும் மேனாட்டார்க்கு வரையறுக்கப்பட்டதுபோன்றே, அந்தணர், பார்ப்பார் என்னும் பெயர்களும் பிராமணர்க்கு வரையறுக்கப் பட்டன என்க. இன்னும் இதன் விரிவையெல்லாம் எனது 'தமிழர்குல மரபு' என்னும் நூலிற் கண்டுகொள்க.தமிழருள், பார்ப்பார் என்பார் இல்லறத்தாரும், அந்தணர் என்பார் துறவறத்தாரும் ஆவர்.

குலத்தலைவராவார், நாட்டாண்மைக்காரன், நாட்டான், பெரிய தனக்காரன், அம்பலக்காரன், ஊர்க்கவுண்டன், ஊர்க்குடும்பன், பட்டக்காரன், ஊராளி, மூப்பன் என ஆங்காங்கு வெவ்வேறு பெயரால் அழைக்கப்பெறும் குலவியல் ஊராட்சியாளர்.

பண்டைத் தமிழ்மண முறையிலேயே இன்னும் பல மணங்கள் நடந்து வருவதால், அவற்றையுந் தழுவுமாறு 'பண்டைத்தமிழ் மணம்' என்னும் தலைப்பிற்குப் பண்டைக் காலத்தில் எல்லாத்தமிழரும் கையாண்ட மணமுறை என்று பொருள் கொள்க.

## 1. மணவகை

### (1) உலகியற் பாகுபாடு

பண்டைத்தமிழ் மணங்களின் உலகியற் பாகுபாடு, பின் வருமாறு பல்வேறு முறை பற்றியதாகும்.

#### 1. கொள்முறை பற்றியது

பண்டைத்தமிழ் மணங்கள், பெண்கோடல் முறை பற்றி, (1) கொடைமணம் (2) காதல் மணம், (3) கவர்வு (வன்கோள்) மணம் என முத்திறப்படும்.

#### (1) கொடை மணம்

கொடைமணமாவது, மணமகனேனும் அவன் பெற்றோரேனும் மணமகள் பெற்றோரை அடுத்துக்கேட்க, அவர் கொடுப்பது. அது, (i)

தானக்கொடை, (ii) விலைக்கொடை, (iii) நிலைப்பாட்டுக்கொடை என மூவகைத்து.

தானக்கொடையாவது, ஒருவர் தம் மகளைத் தக்க ஏழை மணாளனுக்குத் தாமே எல்லாச் செலவும் ஏற்று மணஞ்செய்து வைப்பது: விலைக்கொடையாவது, ஒருவன் தன் மகளுக்கு ஈடாக ஒரு தொகையை ஒரு செல்வனிடம் பெற்றுக்கொண்டு; அவளை அவனுக்கு மனைவியாகக் கொடுப்பது: விலை விற்பனை; இது கீழோரிடம் அருகி நிகழ்வது: நிலைப்பாட்டுக் கொடையாவது, ஒருவர் தம் மகளை ஒருவனுக்கு ஏதேனும் நிலைப்பாடு அல்லது அக்குத்துப் (Condition) பற்றி மனைவியாகக் கொடுப்பது. அந்நிலைப்பாடு, இத்துணைப் பரிசந் தரல்வேண்டுமென்றும், இத்துணைக் காலம் பெண்ணின் பெற்றோர்க்கு உழைத்தல்வேண்டு மென்றும், இன்ன மறச்செயலைப் புரிதல்வேண்டு மென்றும், மணமகளை இன்ன கலையில் வெல்லுதல்வேண்டுமென்றும், மணத்தின்பின் பெண் வீட்டிலேயே வதிதல் வேண்டுமென்றும், பல்வேறு திறப்பட்டதாயிருக்கும்.

மறச்செயல்கள், கொல்லேறு கோடல் (ஏறு தழுவல்), திரிபன்றி யெய்தல், புலிப்பால் கறத்தல், கொடுவிலங்கு கோறல், பகைவரையழித்தல், வில்நாணேற்றல், பெருங்கல் தூக்கல் முதலியன. ஏறு - காளை, கோடல் - அடக்கல், கோறல் - கொல்லுதல். திரிபன்றி யெய்தலாவது, மிக வுயரத்தில் விரைவாகச் சுழன்று கொண்டிருக்கும் சிறிய பன்றியுருவை ஒரே தடவையில் எய்து வீழ்த்துதல்.

பண்டைக் காலத்தில் முல்லை நிலத்திலிருந்த ஆயரிடை, ஏறு தழுவி மணப்பதே குலமரபாக இருந்து வந்தது. ஓர் ஆயர்பாடியில் அல்லது சேரியில், ஒரு பெண்குழந்தை பிறந்தவுடன் அதன் பெயருக்கு ஒரு சேங்கன்றைப் பெற்றோர் ஒதுக்கி வைப்பர். அக்கன்றைக் காயடியாமலும், வேலையில் வயக்காமலும், கொழுத்த ஊட்டங் கொடுத்துக் கொம்பு சீவிக் கூராக்குவர். ஆண்டு தோறும், குறித்த நன்னாளில், மணப்பருவமடைந்த மங்கையர்க்குரிய காளைகளை யெல்லாம் ஒரு தொழுவத்தில் அடைத்து வைத்து, ஒவ்வொன்றாகத் திறந்து விடுவர். மக்கள் ஆரவாரத்தையும் ஏறுகோட்பறை முழக்கத்தையும், கண்டும் கேட்டும், மருண்டோடும் ஒவ்வொரு கொல்லேற்றையும், மாணியரான ஆய இளைஞர் பிடித்துநிறுத்த முயல்வர். பலர் கொல்லேறு

களாற் குத்திக் கொல்லப்படுவது முண்டு. ஒரு கொல்லேற்றை எவன் பிடித்தடக்கி நிறுத்துகின்றானோ அவன் அவ் ஏற்றிற்குரிய ஆய மகளை மணப்பான். இம் மணமுறை, கலித்தொகை என்னும் சங்க நூலில், முல்லைக்கலியில், விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வடநாட்டிற் கண்ணன் ஏழ் ஏறுதழுவி நப்பின்னையை மணந்தது இத்தமிழ் மரபே.

இங்ஙனம் ஒரு மறச்செயலை மணமகனது தகுதியாகக் கொள்ளும் வழக்கத்தினால், ஒரு குலத்தாரின் மறத் திறம் மேன்மேலும் வளர்ந்து வருவதுடன், அவர்க்குப் பிறக்கும் குழந்தைகளும் இயல்பாக மறவுணர்ச்சி விஞ்சியவாயிருக்கின்றன. இவ்வாறு, மறஞ்சிறந்த ஆடவரையே பெண்டிர் மணக்கும் ஏற்பாட்டை, 'பாலியல் தெரிப்பு' (Sexual Selection) என்பர் டார்வின் பேரறிஞர். ஒரு குலத்தார் தமக்குள்ளேயே நெடுகலும் மணந்து வருவதால் ஏற்படும் எச்சவியற் குறைபாட்டிற்கு ஈடு செய்வது, ஏறுதழுவல் போன்ற மணமகன் மறவியல் தகுதி ஏற்பாடே.

ஏறு தழுவல் என்னும் பண்டை வழக்கமே, இன்று கள்ளர் மறவரிடைச் 'சல்லிக்கட்டு' என்றும், 'மஞ்சவிரட்டு' என்றும் வழங்கி வருகின்றது. ஆயர் இவ்வழக்கத்தை நீண்ட காலமாக அடியோடு விட்டுவிட்டதினால், தம் முன்னோரின் மறத்தை முற்றும் இழந்து விட்டனர். சல்லிக்கட்டு மாட்டுத்தொழுவை இன்றும் பாடி அல்லது பாடி வாசல் என்றழைப்பது, இவ்வழக்கம் பண்டைக் காலத்தில் ஆயர்பாடியில் நிகழ்ந்தது என்பதை உணர்த்தும்.

திருமணத்தன்று மணமக்கள் ஊர்வலம் வருவதும், சில சிற்றூர்களில் அயலூர் மணமகன் வந்து ஒரு பெண்ணை மணந்து மீளும்போது, அவ்வூர் இளைஞர் இளவட்டக் காசு என்னும் கைந்நீட்டம் கேட்பதும், பண்டைக்காலத்தில் ஒரு பெண்ணை நோக்கிப் பல இளைஞர் போட்டியிட்டுப் பொருததைக் குறிப்பாய் உணர்த்தும்.

ஆண்மகப் பேறில்லாத பெற்றோர், தம் மருமகனைத் தம் இல்லத்திலேயே இருத்திக்கொள்வர். இவ் ஏற்பாட்டை 'இல்லத்தம்' என்பர் கன்னடர்.

**(2) காதல் மணம்**

காதல் மணமாவது, ஓர் ஆடவனும் ஒரு பெண்டும் பெற்றோரைக் கேளாதும் பிறருக்குத் தெரியாதும் ஒருவரையொருவர் காதலித்து, தாமே கணவனும் மனைவியுமாகக் கூடிக் கொள்வது. இது, களவில் தொடங்குவதும் கற்பில் தொடங்குவதும் என இருவகைத்து. களவென்பது மறைவு; கற்பென்பது வெளிப்படை. "நீ இன்னவாறொழுக வேண்டும்". என மணமகள் திருமண ஆசிரியனால் கற்பிக்கப்படும் நிலைமை கற்பு என்பர்.

களவில் தொடங்குவது, இருமாத எல்லைக்குள் என்றேனும் வெளிப்பட்டுக் கற்பாக மாறிவிடும். இக்களவு வெளிப்பாடு, (1) உடன் போக்கு, (2) அறத்தொடு நிலை என்னும் இருவகைகளுள் ஒன்றால் ஏற்படும். உடன்போக்காவது, களவொழுக்கம் தடைப்பட்டவிடத்து அல்லது காதலியின் பெற்றோர் அவளைத்தர இசையாவிடத்து, காதலன் அவளை வேற்றூர்க்கேனும் தன் வீட்டிற்கேனும் அழைத்துக்கொண்டு போய் விடல். அறத்தொடு நிலையாவது, காதலியின் மெலிவு கண்டு அதைப்போக்குவதற்கு, அவள் பெற்றோர் கட்டுவிச்சி (குறிகாரி) வேலன் (மந்திரக்காரன்) முதலியோரின் துணை வேண்டும்போதோ, அதற்கு முன்னதாகவோ, காதலி தானாகவேனும் தன் தோழிவாயிலாகவேனும் தன் காதலனைப்பற்றித் தெரிவித்தல்.

காதலர் ஒரு நாளுங் களவொழுக்கமின்றிக் கற்பாகவே தம் கூட்டு வாழ்க்கையைத் தொடங்குவதுமுண்டு. இவ் இருவகைத் தொடக்கமும், கரணத்தோடு கூடியதாகவும் இருக்கலாம்; கூடாத தாகவுமிருக்கலாம். அக்கரணமும், மணமகன் தானே செய்விப்ப தாகவுமிருக்கலாம்; மணமகள் பெற்றோரைக் கொண்டு செய்விப்ப தாகவுமிருக்கலாம்.

இங்குக் கற்பென்பது உண்மையில் களவொழுக்கத்தின் வெளிப்பாடேயாயினும், அது பொதுவாகக் கரணத்தொடு கூடிய தாகவே கொள்ளப்படும்.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே". (கற்பியல், 1)

**"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
**புணர்ந்துடன் போகிய காலை யான".** *(ஷ 2)*

என்பன தொல்காப்பியம்.

உடன்போக்குச் சென்ற காதலன், தன்னூர் வேற்றூராயின் போனவிடத்தும் காதலியூரேயாயினும், பெரும்பாலும் தன் மனையிலேயே அதை வைத்துக்கொள்வன். "உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்" என்பதாலும்,

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்று"**

என்பதாலும் (தொல். களா. 22), காதலியின் பெற்றோர் காதலனை ஒப்புக்கொண்டு, அவன் வதுவை மணத்தைத் தம் மனையில் நடத்தவிரும்பின், அவ்விருப்பம் நிறைவேறுவதுமுண்டு. யார் மனையில் வதுவை நிகழினும், வதுவைக்கு முன் மணமகள் காலில் அவள் பெற்றோரால் அணியப்பட்டிருந்த சிலம்பை நீக்குதற்கு ஒரு சடங்கு செய்யப்படும். அது 'சிலம்பு கழி நோன்பு' எனப்படும்.

இதை,

**"நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்**
**எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்**
**சொல்லின் எவனோ மற்றே வென்வேல்**
**மையற விளங்கிய கழலடிப்**
**பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே".**

என்னும் ஐங்குறு நூற்றுச் செய்யுளால் (399) அறியலாம்.

இது, உடன்கொண்டுபோன காதலன் மீண்டு வந்து, தன் காதலியைத் தன் இல்லத்திற்குக் கொண்டு சென்ற விடத்து, அவன் தாய் அவளுக்குச் சிலம்பு கழி நோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் (பெற்றதாய்), அங்கு நின்றும் வந்தார்க்குச் சொல்லியது.

(நும்-உம். சிலம்பு -தண்டை. கழீஇ-கழித்து. அயரினும்-கொண்டாடினாலும். கழிகென - நடக்கவென்று. எவனோ-என்ன. வென்-வெற்றி. மையற-குற்றம் நீங்க, கழல்-வீரக்காலணி, காளை வீரனாகிய காதலன்).

கரணமின்றியும் கணவனும் மனைவியுமாக இரு காதலர் இசைந்து வாழக்கூடுமாயினும், கரணத்தொடு தொடங்கும் இல்லறமே எல்லாராலும் போற்றப்படுவதாம்; அஃதில்லாக்கால், அது வைப்பு என இழிந்தோராலும் தூற்றப்படுவதே.

காதலர் வாழ்வு களவொழுக்கத்தோடு தொடங்கின் மெய்யுறு புணர்ச்சியும், அல்லாக்கால் உள்ளப்புணர்ச்சிமாத்திரையும், கற்பிற்கு முன் பெறுபவராவர்.

பெற்றோரும் பிறரும் முடித்து வைக்கும் திருமணத்திலும் மணமக்கள் இருவர்க்கும் காதலுண்டாகலாமெனினும், காதல் மணமென்று சிறப்பித்துச் சொல்லப்பெறுவது ஓர் ஆடவனும் ஒரு பெண்டும் தாமாக வாழ்க்கை ஒப்பந்தஞ் செய்துகொள்வதே.

## மடலேற்றம்

முதுபழங்காலத்தில், ஒரு கடுங்காதலன் அல்லது காதற்பித்தன் அவன் காதலியை மணத்தற்கு அவள் பெற்றோர் இசையாவிடின், அவளைப் பெறுதற்கு மடலேற்றம் என்னும் உயிர்ச்சேதத்திற் கிடமான ஒரு வன்முறையைக் கையாள்வதுண்டு. அது இக்காலத்துச் சத்தியாக்கிரகமென்னும் பாடுகிடப்புப்போன்றது.

மடலேறத் துணிந்த காதலன், நீர்ச்சீலை ஒன்றேயுடுத்து உடம்பெலாஞ் சாம்பற்பூசி எருக்கமாலையணிந்து, தன் காதலியின் ஊர் நடுவே தவநிலையிலமர்ந்து, அவள் உருவை வரைந்த ஒரு துணியைக் கையிலேந்தி, அதை உற்று நோக்கிய வண்ணமாய் வாளாவிருப்பன். அதனைக் கண்ட அவ்வூரார் "நீ ஆய்வு (சோதனை) தருகின்றாயா?" எனக் கேட்பர். அவன் "தருகின்றேன்" எனின், பனங்கருக்கு மட்டையாற் செய்த ஒரு பொய்க் குதிரையின் மேல் அவனையேற்றித் தெரு நெடுக இழுத்துச் செல்வர். அங்ஙனம் இழுக்கும்போது, அவன் உடம்பிற் கருக்கறுத்துக் காயம் பட்டவிடமெல்லாம் வெளுத்துத் தோன்றின், அவனுக்கு அவன் காதலியை மணமுடித்து வைப்பர்; அல்லாக்கால் வையார். இது காதலர் தாமாகக் கூடுவதன்றாயினும், ஒரு புடை யொப்புமை பற்றி இங்குக் கூறப்பட்டது.

**காதற் பாட்டுக்கள்**

இவ்வுலகிற் சிறந்தது இல்லற இன்பம். அதிலும், காதலர் நுகர்வது கரையற்றது. அவர் ஓரூரராயும் ஒருவரையொருவர் முன்னறிந்தவராயும் இருக்கவேண்டுமென்னும் யாப்புறவில்லை. "கருங்கடலுப்பிற்கும், கருமலை நாரத்தைக்கும் தொந்தம்" ஏற்படுவதுபோல், நெட்டிடைப்பட்ட இருவர் ஓரிடத்து ஒருவரை யொருவர் கண்டு காதலிக்கவும் நேரும். அத்தகை நிலைமை வாய்ந்த ஒரு காதலன் கூற்றாக வுள்ள பாட்டொன்று வருமாறு:

**"யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்.**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெய்ந்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே".** *(குறுந்தொகை, 40)*

(யாய்-என் தாய், ஞாய்-உன் தாய். எந்தை-என் தந்தை. நுந்தை-உன் தந்தை. கேளிர்-உறவினர். செம்புலப்பெய்ந்நீர் போல-சிவந்த நிலத்திற் சேர்ந்த நீரும் சிவப்பது போல.)

இனி, ஒரு காதலி கூற்றாக வுள்ள பாட்டொன்று வருமாறு:-

**"இராமழை பெய்த ஈர ஈரத்துள்**
**பனைநுகங் கொண்டு யானையேர் பூட்டி**
**வெள்ளி விரைத்துப் பொன்னே விளையினும்**
**வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே**
**செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து**
**கன்று காத்துக் குன்றில் உணக்கி**
**ஊடுபதர் போக்கிமுன் உதவினோர்க் குதவிக்**
**காடுகழி இந்தனம் பாடுபார்த் தெடுத்துக்**
**குப்பைக் கீரை உப்பின்றி வெந்ததை**
**இரவல் தாலம் பரிவுடன் வாங்கிச்**
**சோறது கொண்டு பீறல் அடைத்தே**
**ஒன்றுவிட் டொருநாள் தின்று கிடப்பினும்**
**நன்றே தோழிநம் கணவன் வாழ்வே".**

(நுகம்-நுகத்தடி. ஈண்டிய-செல்வமிகுந்த. உணக்கி-காயவைத்து. இந்தனம்-விறகு. பாடு-விழுதல். தாலம்-உண்கலம். பரிவு-வருத்தம். பீறல் -சேலைக்கிழிவு). -

### (3) கவர்வு மணம்

கவர்வு மணமாவது, ஒரு பெண்ணைப் பெற்றோரிசைவும் அவள் இசைவுமின்றி, வலிந்து பற்றுதல்.

அது, ஊருக்கு வெளியே தனித்து நிற்கும் ஓர் இளம்பெண்ணை, வேற்றூரான் ஒருவன் வலிந்து பற்றிக்கொண்டு போய், அவளை மனைவியாகக் கொள்வது போன்றது.

ஒரு மறக்குடிப் பெண்ணை மணக்க விரும்பிய வேந்தன், அக்குடியார் அதற்கிசையாவிடத்து, பெரும் படையொடு சென்று அவரோடு போர் புரிவதுண்டு. அம்மறவர் தம் குடியின் மானத்தைக் காத்தற்கு அஞ்சாது எதிர்ப்பர். இது மகட்பாற் காஞ்சி எனப்படும்.

"நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானும்".

என்று தொல்காப்பியர் கூறியது இதுவே (புறத்திணையியல், 24). இதனையே, மறம் என்னுங் கலம்பகவுறுப்பு, அரசன் பெண்கேட்டு விடுத்த திருமுகத்தைக் கொணர்ந்த தூதனை நோக்கி, மறவர் எச்சரித்தும் அச்சுறுத்தியும் விடுப்பதாகக் கூறும்.

ஒரு மணப்பெண்ணின் அழகைப் பழிக்கும்போது, "அவள் என்ன ஒரு பெரிய சிறையா?" என்று பெண்டிர் கூறும் வழக்கம், ஒரு காலத்திற் பேரழகுடைய பெண்கள் வலியோராலும் அரசராலும் சிறை பிடிக்கப்பட்டமையை உணர்த்தும்.

ஓர் அரசன், தன் பகையரசனை வென்று அல்லது கொன்று, அவனுடைய தேவியரைச் சிறை பிடித்து வந்து வேளம் என்னும் சிறைச்சாலையில் இட்டு அவமானப்படுத்துவது, கவர்வு மணத்தின் பாற்படாது.

## 2. குலமுறை பற்றியது

பண்டைமுறைத் தமிழ் மணங்கள், குலமுறை பற்றி அகமணம் (Endogamy), புறமணம் (Exogamy) என இருவகைப்படும்.

அகமணமாவது, ஒரு குலத்தார் தம் குலத்திற்குள்ளேயே மணத்தல்;புறமணமாவது ஒரு குலப் பிரிவார் தம் பிரிவிற்குள் மணவாது வேறொரு பிரிவில் மணத்தல்.

இன்றுள்ள குலங்களுள், கலப்புக் குலங்கள் தவிர ஏனைய வெல்லாம் அகமணத்தனவே. திணைமயக்கம் ஏற்படு முன் குறவர், ஆயர், வேட்டுவர், உழவர், நுளையர் (செம்படவர்) எனத் தமிழர் ஐந்திணை மக்களாய் வெவ்வேறு நிலத்தில் வாழ்ந்தபோது, அவர்க்குள் பெரும்பால் வழக்கமாய் நிகழ்ந்தது அகமணமே.

குலப்பிரிவுகள், நாடு, ஊர், குலம், கூட்டம், கிளை, வகுப்பு, இல்லம், கரை முதலியனவாகப் பல்வேறு திறப்படும்.

> “நாடும் ஊரும் இல்லும் குடியும்
> பிறப்பும் சிறப்பும்”

என்பது தொல்காப்பியம் (1060).

சேலம் மாவட்டத்துச் சேர்வராயன்மலை பச்சைமலை கொல்லிமலை முதலிய மலைகளில் வாழும் தமிழ் மலையாளிக் குலத்தில், (1) பெரிய மலையாளி, (2) பச்சை மலையாளி, (3) கொல்லி மலையாளி என்னும் மூன்றும் உட்குலங்கள். இவற்றுள், கொல்லி மலையாளி என்னும் உட்குலத்தில் (1) முந்நாட்டு மலையாளி, (2) நால்நாட்டுமலையாளி, (3) அஞ்சூர் மலையாளி என்னும் நாட்டுத் தொகுதியில், (1) மயிலம் (2) திருப்புலி, (3) இடப்புலி, (4) பிறகரை, (5) சிற்றூர் என்னும் ஐந்தும் நாடுகள் என்னும் உட்பிரிவுகள். இவற்றுள், சிற்றூர் என்னும் நாட்டில், (1) பீலன், (2) மூக்காண்டி, (3) பூசன், (4) மாணிக்கன், (5) திருவிச்சி, (6) கண்ணன், (7) தில்லான் என்னும் ஏழும் வகுப்புகள் என்னும் உட்பிரிவுகள். இவற்றுள் முன் ஐந்தும் ஒரு தொகுதித்தாயாதி வகுப்புகள்; பின் இரண்டும் மற்றொரு தொகுதித்தாயாதி வகுப்புகள். இவ் இரு தொகுதிகளுள் ஒவ்வொன்றும் அடுத்த தொகுதியுளன்றித் தன்தொகுதியுள் மணப்பதில்லை. இது புறமணமாம்.

கொங்கவேளாளர் குலத்தின் உட்பிரிவுகளான, தூரங்குலம் செம்போத்தங்குலம் ஆந்தைக்குலம் முதலிய இருபத்திரண்டு குலங்களும், புறமணத்தனவாம். இக்குலங்கள் கூட்டமெனவும்படும்.

ஒரே குலத்துள் தொடர்ந்து மணங்கள் நடைபெறுவதால் விளையும் கேட்டை விலக்குதற்கே, குலப்பிரிவுகட்குப் புறமணம் விதிக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

அரசர் பிறகுலத்தில் தாம் பெண்கொண்டாலும், தம் மகளிரைப் பிறகுலத்தார்க்குக் கொடுப்பதில்லை. இது உயர்மணத்தின் (Hypergamy) பாற்படும்.

3. மணமக்கள் தொகை பற்றியது

மணமக்கள் தொகைபற்றி, தமிழ் மணங்கள் (1) ஒரு மனையம் (Monogamy) (2) பல்மனையம் (Polygamy), (3) பல்கணவம் (Polyandry) என மூவகைப்படும்.

ஒரு காலத்தில் ஒரே மனைவியுடைமை ஒருமனையம்; ஒரே காலத்தில் பலமனைவியருடைமை பல்மனையம்; ஒரே காலத்தில் பல கணவருடைமை பல்கணவம்.

பண்டைக் காலத்தில், பல அரசரும் தலைவரும், பல் மனையத்தைத் தழுவியதுடன் பொது மகளிராகிய பரத்தையருடனும் தொடர்பு கொண்டிருந்தனர். பரத்தையருள், வேறாக ஓர் இல்லத்தில் இருப்பவள் இற்பரத்தையென்றும், பரத்தையர் சேரியில் இருப்பவள் சேரிப்பரத்தையென்றும், சேரிப்பரத்தையருள் சிறந்து காதலிக்கப் படுபவள் காதற்பரத்தையென்றும் சொல்லப்படுவர்.

பரத்தையர் போன்றே பொது மகளிராயுள்ள இன்னொரு வகுப்பார் கணிகையர் (கூத்தியர்) என்பார். காலங்கணித்தாடுபவர் கணிகையர். அவர் நாடகக் கணிகையர் கோயிற் கணிகையர் என இருசாரார்.

இனி, பொது மகளிலல்லாது, கரணமின்றி மனைவியர் போல் வைத்துக்கொள்ளப்படும் வைப்பு என்னும் மகளிருமுண்டு. அவர் கன்னியராகவோ கட்டுப்பட்டவராகவோ கைம்பெண்டிராகவோ இருக்கலாம்.

பண்டைத்தமிழர் பொதுவாகப் பண்பாட்டிலும் பல்துறைப் பட்ட நாகரிகத்திலும் சிறந்திருந்தாரேனும், பெண்ணினபத்துறையில் பெரும்பாலும் நெகிழ்ந்த நெறியுடையராகவேயிருந்தனர். அரசர் கட்டுமட்டின்றிச் சிற்றின்பத்தை நுகர்ந்து வந்ததினாலேயே, உலா, மடல், காதல் முதலிய அகப்பொருட் பனுவல்களும் (பிரபந்தங்கள்) பரத்தையிற் பிரிவு என்னும் கோவைக் கிளவிக்கொத்தும் இடைக்

காலத்தெழுந்தன. மேனாட்டார் இந்நாவலந் தேயத்திற்கு வந்த பின்பே, இந்நெறிதிறம்பியநிலை திருந்தத் தொடங்கிற்று.

பல்கணவம் பெண் பஞ்சத்தாலும் பெண்கொலையாலும் ஏற்படுவது. அது இன்று நீலமலைத் தொதுவரிடையே உள்ளது.

**4. மணமகள்நிலை பற்றியது**

மணமகள் நிலைபற்றி, தமிழ் மணங்கள், (1) கன்னி மணம், (2) கட்டுப்பட்டவள் மணம், (3) கைம்பெண் மணம் என முத்திறப்படும்.

கன்னி மணம், ஒரு கன்னிப் பெண்ணைப் புதிதாக மணத்தல்; கட்டுப்பட்டவள் மணம், ஒருமுறை மணக்கப்பட்டுத் தீரப்பட்டவளை மணத்தல்; கைம்பெண் மணம், கணவனை யிழந்தவளை மணத்தல். இவற்றுள் பின்னவையிரண்டும் இழிந்தோர் மணமாகவும் இடைத் தரத்தோர் மணமாகவும் இருந்துவந்திருக்கின்றன.

ஒரு முறை மணக்கப்பட்டவளை மறுமணஞ் செய்தல் சிறப்பில்லாத தாகக் கருதப்படுவதால், கட்டுப்பட்டவள் மணத்தில் மணமுழா (கலியாண மேளம்) இன்றியே தாலி கட்டப்படுவதுமுண்டு. அது கட்டுத்தாலியென்றும், மணமுழவு உள்ளது கொட்டுத்திருமணம் என்றும் பெயர் பெறும். கைம்பெண் மணம் பெரும்பாலும் கட்டுத்தாலியாகவேயிருக்கும்.

**(2) இலக்கணப் பாகுபாடு**

இனி, தமிழிக்கண நூல்கள், மணமக்களின் காதல் நிலை பற்றித் தமிழ் மணங்களை, (1) கைக்கிளை, (2) அன்பினைந்திணை, (3) பெருந்திணை என மூவகையாக வகுத்துக் கூறும்.

கைக்கிளையாவது, ஆடவன் பெண்டு ஆகிய இருவருள்ளும் ஒருவருக்கே காதல் இருப்பது; அன்பின் ஐந்திணையாவது, அவ் இருவருக்கும் காதல் இருப்பது; பெருந்திணையாவது, அவ் இருவருக்கும் காதல் இல்லாதிருப்பது அல்லது ஒருவரையொருவர் வலிந்துகொள்வது . இம்மூன்றும், முறையே ஒருதலைக் காமம், இருதலைக் காமம், பொருந்தாக் காமம் என்றும் சொல்லப்பெறும். கை என்பது பக்கம். கிளை என்பது நேயம். ஆகவே கைக்கிளை என்பது ஒருதலைக்காதல், ஐந்திணை என்பன, குறிஞ்சி, முல்லை, பாலை,

மருதம், நெய்தல் என்னும் ஐந்நிலங்கள். குறிஞ்சி மலையும் மலைசார்ந்த இடமும்; முல்லை மலையற்ற செடிங்காடும் புல் வெளியும்; பாலை நீரும் நிழலுமின்றி வற்றி வறண்ட இடம்; மருதம் நீர்வளமும் நிலவளமும் ஒருங்கேயுள்ள வயல்நாடு; நெய்தல் கடலும் கடற்கரையும். இவ் ஐந்நிலங்கட்கும் பொதுவாகக் கொள்ளப்பட்டதினால், இரு தலைக்காதல் அன்பின் ஐந்திணை யெனப்பட்டது.

பெருந்திணை பெரும்பகுதி மக்கள் மணமுறைகளுள் பெரும்பாலனவற்றைத் தன்னுள் அடக்கி நிற்பதால், பொருந்தாக் காமம் பெருந்திணை யெனப்பட்டது. கவர்வு மணங்களும், இயற்கைக்கு மாறான எல்லாப் புணர்ச்சிவகைகளும், பெருந்திணையே. காதலொடு பொருந்தாமையும் நெறியொடு பொருந்தாமையும் பற்றி, பெருந்திணை பொருந்தாக்காமம் எனப்பட்டது.

கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நிலமில்லாதபடி, ஐவகை நிலங்களையும் நடுநாயகமான அன்பின் ஐந்திணைக்கே உரிமை யாக்கிவிட்டதனால், மக்கட்கு நலம் பயவாத ஏனையிருமண முறைகளும் இந்நிலவுலகத்தில்லாது நீங்கல் வேண்டும் என்பது, முன்னைத் தமிழிலக்கண நூலாரின் கருத்தாகும்.

மணமக்களின் இசைவைக்கேளாது பெற்றோரே முடித்து வைக்கும் திருமணங்களில், மணமகனுக்கு அல்லது மணமகளுக்கு மட்டும் காதல் இருப்பின், அது கைக்கிளை மணமாம்; இருவருக்கும் இருப்பின், அது அன்பின் ஐந்திணையாம்; ஒருவருக்கும் இல்லாவிடின், பெருந்திணையின் பாற்படுவதாம்.

மணமக்கள் இருவருள் ஒருவருக்கு மட்டும் காதல் இருக்கும்போது, ஏனையவரும் எதிர்ப்பின்றி இசைந்திருந்தால்தான், அது கைக்கிளை மணமாகும். அல்லாக்கால் அது பெருந்திணையே. ஒருதலைக்காமம் என்பது காதலின்றியும் இசைந்துவரும் பெண்ணை ஆடவனும் ஆடவனைப் பெண்ணும் மணப்பதேயன்றி, இசையாப் பெண்ணையும் ஆடவனையும் வலிதில் மணப்பதன்று.

ஒருதலைக் காமம் என்னும் முறையில் கைக்கிளையும், பெருந் திணையும் ஒக்குமேனும், முன்னதுநெறிப்பட்டதென்றும், பின்னது நெறி திறம்பியதென்றும், இவற்றின் வேறு பாடறிதல் வேண்டும்.

காமவுணர்ச்சியில்லாச் சிறுமியிடத்தும், காமவுணர்ச்சி யிருந்தும் தன்மேற் காதல் கொள்ளாப் பருவப்பெண்ணிடத்தும், ஒருவன் காதன்மொழிகளைக் கூறி இன்புறுவது கைக்கிளைக் குறிப்பேயன்றிக் கைக்கிளை மணமாகாது.

இருதலையுங் காதலுள்ளவிடத்தும், முதியாளொடு கூடுதலும், கூட்ட இடையீடுபாட்டால் ஏற்படும் காமப் பித்தமும் கழி நெஞ்சழிவும், பெருந்திணையென்று கூறப்பட்டிருப்பதால்; விண்ணின்பத்தை யொத்ததொரு பெண்ணின்பத்தை மண்ணுலகோர்க்கு வகுத்தனர் முன்னைத் தமிழ் இலக்கணியர் என்க.

இத்தகைய இன்பம் மிகமிக அரிதாய் ஒரு சிலர்க்கே கிட்டுவதாயினும், அதை ஓர் அளவையாகக்கொண்டு கூறியது 'புலனெறி வழக்கம்' எனப்படும்.

**2. மணத்தொகை**

பண்டைத் தமிழ் மணங்கட்கு இத்துணை என்னுந்தொகை வரம்பில்லை. மணப்பருவம் மணமகனுக்குப் பதினாறாண்டென்றும், மணமகளுக்குப் பன்னீராண்டென்றும், நூல்கள் கூறும். பண்டைக் காலத் தமிழ் மக்கள் எத்துணை வலிமை மிக்கவராய் இருந்திருப்பினும், நூல்களில் மணமக்கட்குக் குறிக்கப்பட்ட பருவம் முந்தியதே. அக் காலத்தில் திருமணச் சட்ட வரம்பின்மையாலும், இன்பச் சிறப் பொன்றையே மக்கள் கருதியதாலும், இளமை முதல் முதுமை வரை எத்துணை மணஞ்செய்யமுடியுமோ அத்துணை மணஞ் செய்தற்கு அன்று இடமிருந்தது. ஆயினும் சில அரசரும் கீழோருமே இந் நிலையை மிகுதியாய்ப் பயன்படுத்தினர். பெண்டிர்க்குக் காமநுகர்ச்சிப் பருவம் பன்னீராண்டு முதல் நாற்பதாண்டுவரை என்பது நூன்மரபு.

பெண்ணின் ஐந்தாண்டு முதல் நாற்பதாண்டு வரைப் பட்ட பருவத்தைப் பின்வருமாறு எழுநிலையாக இலக்கண நூல்கள் வகுத்துக்கூறும்.

(1) பேதை *5-7* ஆண்டு
(2) பெதும்பை *8-11* ஆண்டு.
(3) மங்கை *12-13* ஆண்டு.
(4) மடந்தை *14-19* ஆண்டு.
(5) அரிவை *20-25* ஆண்டு.
(6) தெரிவை *26-31* ஆண்டு.
(7) பேரிளம் பெண் *32-40* ஆண்டு

அரசர்க்குச் செல்வச்சிறப்பு, கீழோருக்குத் தீர்வை முறையும் மனைவியர் உழைப்பும், பல்மணஞ் செய்தற்குத் துணையாயிருந்தன.

அக்காலத்தரசர் கண்கண்ட தெய்வங்களாதலின், அவர் பன் மணஞ் செய்தலைத் தடுப்பார் எவருமிலர். ஆதலால், அவர் வழிமுறை மணங்கட்குக் காரணங் காட்ட வேண்டுவதில்லை. கீழோர், நோயும் மாதப்பூப்பும் சண்டையும்போலச் சிறு கூட்டத்தடை ஏற்படினும், அதைக் காரணமாகக் காட்டி மறுமணஞ் செய்துகொள்வர். முதல் மனைவிக்கு ஓராண்டு பிள்ளையில்லாவிடின், உடனே மறுமணஞ் செய்துகொள்வது சிலர் இயல்பு. சிலர், பிள்ளையிருப்பினும், இருபாலும் இல்லையென்றும் பலரில்லையென்றும் சொல்லிக் கொண்டு, மறுமணஞ் செய்வதுண்டு. இது இன்றும் தொடர்ந்து வருகின்றது.

### 3. மண நடைமுறை

பண்டைத்தமிழ் மணங்கள் பின்வருமாறு நடந்து வந்தன.

#### (1) மணப்பேச்சு

பொதுவாக, ஓர் இளைஞனுக்குப் பதினெட்டாண்டு நிரம்பிய பின், அவன் பெற்றோர் அவன் காமக் குறிப்பறிந்தோ தாமாகக் கருதியோ, பெரும்பாலும் மரபுப்படி ஒத்த குலத்தில் ஒரு பெண்ணைப் பேசி மணஞ் செய்து வைப்பர்.

அம்மான் மகளும் அத்தை மகளும்போல முறைகாரப் பெண்ணாயின் "உரிமைப்பெண்" என்றும், வேறு செல்வர் வீட்டுப் பெண்ணாயின் "பெருமைப் பெண்" என்றும் அழைப்பது வழக்கம். உரிமைப் பெண் இல்லாவிடத்தும் அவளை மணவாவிடத்தும், அயலிலேயே மணம் பேசப் பெறும்.

மணப்பேச்சு முன்காலத்தில் ஒரு தொல்லையான கலையாக இருந்து வந்தது. மணமகன் பெற்றோர், மணக்கத் தக்க ஒரு பெண்ணின் பெற்றோரிடம், வள்ளுவன் அல்லது கணியன் குறித்த நன்னாளில், பெரியோரை விடுப்பர். பெற்றோரும் உடன் செல்வதுண்டு. பெண் பேசச் செல்லும் போது, குறி (சகுனம்), நற்சொல் (வாய்ப்புள்), புள் (பறவைநிமித்தம்) முதலியன பார்த்தல் வழக்கம்.

பெண்ணின் பெற்றோர் தம் மகளைத்தர இசைந்தபின் மணமகன் வீட்டார் மணமகனுக்கும் பெண்ணுக்குமுள்ள பொருத்தங்களைக் கணிய (சோதிட) முறைப்படி பல்வேறு வகையிற் பார்ப்பர். அப்பொருத்தங்கள், பொதுவாக,

(1) நாள் (நட்சத்திரம்) (6) ஓரை (இராசி)
(2) கணம் (7) கோள் (இராசியதிபதி)
(3) எண்ணிக்கை (மாகேந்திரம்) (8) வசியம்
(4) பெண் நீட்சி (ஸ்திரீ தீர்க்கம்) (9) இணக்கம் (வேதை)
(5) பிறவி (யோனி) (10) சரடு (இரச்சு)

எனப் பத்து வகைப்படும். இப்பத்து வகையும் ஒருங்கே பெரும்பாலும் பொருந்துவதில்லை. அதனால், பல்வேறு பெண்ணை நாடிப் பல்வேறு ஊர்க்குச் செல்வது வழக்கம். இது மிகுந்த அலைச்சலையும் காலக் கடப்பையும் உண்டுபண்ணும். இதனாலேயே, "ஒரு மணத்திற்கு ஏழு செருப்புத் தேயவேண்டும்" என்னும் பழமொழி எழுந்தது. இனி, மேற்கூறிய பதின் பொருத்தத்துடன், வாழ்நாள், குறிப்பு (பாவகம்), மரம், புள், குலம் என்னும் ஐம்பொருத்தம் பார்ப்பதுண்டு.

***(2) மணவுறுதி (நிச்சயார்த்தம்)***

யாரேனும் ஒரு பெண்ணிடம் பதின் பொருத்தமும் அமைந்திருப்பின், அல்லது அமைந்திருப்பதாகச் சொல்லப்படின், உறுப்புக் குறையும் நோய்க் குற்றமும் இல்லாவிடத்து, மணமகன் வீட்டாரும் பெண் வீட்டாரும் ஒரு நன்னாளில் பெண் வீட்டில் பலரறிய மணவுறுதி செய்துகொள்வர். அவ்வுறுதிச் சடங்கை உறுதி வெற்றிலை (நிச்சய தாம்பூலம்) என்றும் அழைக்கலாம்.

மணவுறுதிச்சடங்கில், வெற்றிலைபாக்கு, குங்குமம், மஞ்சள் முதலியன வைக்கப்பட்ட ஒரு தட்டில், பெண் வீட்டார் கேட்ட பரிசப்பணமும், பெண்ணிற்கு ஒரு கூறையும் வைக்கப்பெறும். இரு வீட்டாரும் மணப்பெண்ணிற்கு அணியவேண்டிய அணிகளும், திருமணச் செலவில் ஏற்றுக் கொள்ளவேண்டிய பகுதிகளும், அன்றே பேசி முடிவு செய்யப்படும்.

சில சமயங்களில், மணமகன் குற்றங்குறைகளை மணமகன் வீட்டாரும், மணமகள் குற்றங்குறைகளை மணமகள் வீட்டாரும், மறைத்துவைப்பதுமுண்டு. திருமணம் இருவர்க்கு வாழ்வை யுண்டு பண்ணும் மங்கல நிகழ்ச்சியாதலால், அங்ஙனம் மறைத்துவைப்போர் "ஆயிரம் பொய் சொல்லி ஒரு திருமணம் செய்துவை (ஒரு விளக்கேற்றிவை)" என்னும் பழமொழியைச் சொல்லித் தம்மைத் தேற்றிக்கொள்வர்.

*(3) மணவிழா*

**i. முன்னிகழ்ச்சிகள்**

மணவுறுதியான பின், மணத்திற்குரிய சித்திரை, ஆனி போன்ற நல்ல மாதத்தில், திங்கள், அறிவன் (புதன்) போன்ற நல்ல கிழமையில், 2-ஆவது 7-ஆவது போன்ற நல்ல பக்கத்தில் (திதியில்), புரவி (அசுபதி) சகடு (உரோகணி) போன்ற நல்ல நாளில் (நட்சத்திரத்தில்), நல்ல ஓரையில் (இலக்கினத்தில்) அமையும் மங்கல முழுத்தம் (முகூர்த்தம்) குறிக்கப் பெறும். அதன்பின், மணச்செய்தி காலமும் இடமுங்குறித்து, உற்றார் உறவினர் அனைவர்க்கும் பாக்கு வைத்துச் சொல்லப்பெறும்.

மணமனை, குலமரபுப்படி, மணமகன் வீடாகவோ மணமகள் வீடாகவோ இருக்கும். பொதுவாய், மணமகன் வீட்டில் மணம் நடைபெறும்.

மணமனையில், மணநாளுக்கு முன் 3, 5, 7, 9 ஆகிய ஒற்றித்த நாட்களுள் ஒன்றில், நல்வேளையில் முழுத்தக்கால் நாட்டிப் பந்தல் அல்லது கொட்டகை போடப்பெறும். பந்தல் அலங்கரிப்பு அவரவர் செல்வ நிலையைப் பொறுத்தது. பந்தலில் வாழை கமுகு கூந்தற்பனைமடல் முதலியன கட்டப்பெறுவதுண்டு. எத்துணை யெளியராயினும் வாழை மரம் தப்பாது கட்டப்பெறும். அது மணமக்கள் மரபு குஞ்சுங் குழுவானுமாய் வழிவழி வாழவேண்டும் என்னுங் குறிப்பையுடையதாகக் கருதப்பெறுவது.

பந்தல் நடுவில் அல்லது அதன் ஒரு கோடியில் மணவறை அமைக்கப்படும். அதன் காலொன்றில் அரசங்கொம்பு கட்டப்பெறும். அதை அரசாணிக்கால் என்பர். பண்டைக்காலத்தில் அரசன்

தெய்வமாகக் கருதப்பட்டதினாலும், 'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்' என்பதினாலும், அரசனைக் குறித்தற்கு அரசங்கொம்பை மணவறையில் நட்டி, அதை அரச ஆணிக்கால் என்று அழைத்ததாகத் தெரிகின்றது. மணவறையை அரசாணி மேடை என்பதுமுண்டு.

மணவறையில், பூ, மஞ்சள், குங்குமம், சந்தனம், அரிசி, அறுகு, வெற்றிலை பாக்கு, தேங்காய், முளைப்பாலிகை, விளக்கு, நிறைகும்பம், கோலப்பானை முதலிய மங்கலப் பொருள்கள் வைக்கப்பெறும். கோலப் பானையை ஆயிரங்கண்ணுப் பானையென்றும், அரசாணிப் பானையென்றும் ஆயிரத்தாழியென்றுஞ் சொல்வதுண்டு. மணமக்கள் குறைவின்றி மங்கலமாய் நீடூழி வாழவேண்டுமென்பதே, மணவறையில் மங்கலப் பொருள்களை வைப்பதின் கருத்து. விளக்கு தெய்வச் சின்னம்.

மணவினைகள் தொடங்குமுன்பே, மணமகனுக்கும் மண மகளுக்கும், முறையே, வலக்கையிலும் இடக்கையிலும் காப்பு நாண் கட்டப்பட்டிருக்கும். மணவிழா முடியும் வரை மணமக்கட்குப் பேயாலும் பிறவற்றாலும் எவ்வகைத் தீங்கும் நேரக்கூடாதென்பதே, அதன் நோக்கம். காப்பு தீங்கு வராமற்காத்தல். முதற்காலத்தில் குளிசம்போற் கட்டப்பட்ட காப்பு நாணே, பிற்காலத்தில் அப் பெயருள்ள அணியாக மாறிற்று.

மண நாளில் மண மனையில் மங்கல மணமுழா முழங்கும். உற்றாரும் உறவினரும், மணப்பந்தற்கீழ் வந்தமர்வர். திருமண ஆசிரியன் முழுத்த வேளையில் மணவறையில் வந்தமர்வான். அவன் தமிழப் பார்ப்பானாகவோ, குலத்தலைவனாகவோ இருப்பான். மணமக்களும் நீராடி மஞ்சள் தோய்த்த அல்லது தோயாத புத்தாடை யணிந்து, மணமகன் முன்னும் மணமகள் பின்னுமாக, தனித்தனியாக மணவறைக்குக் கொண்டு வரப்படுவர். மணமனை மணமகன் வீடாயின் மணமகளும், மணமகள் வீடாயின் மணமகனும், வேறோர் மனையிலிருந்து மேள தாளத்துடன் அழைத்து வரப்பெறுவர்.

**ii. கரணம்**

திருமண ஆசிரியன் தெய்வ வழிபாடாற்றி, மணமக்கள் பெயரும் மணமும் விளம்பி, விளக்குச் சான்றாக அவர்களைச் சூளிடுவித்து, குங்குமம் மஞ்சளுடன் தட்டிலிட்டுச் சூடங் கொளுத்தப்பட்டுப் பெரி

யோரால் வாழ்த்தப் பெற்ற தாலியை எடுத்து, மணமகன் கையில் கொடுக்க, அவன் அதை வாங்கிப் பெண்ணின் கழுத்தில் கட்டுவன். அன்று முழவு இடியென முழங்கும். மணமக்கள் மேல் மலர் மாரி பொழியும் அதன்பின் மணமக்கள் மாலை மாற்றிக்கொள்வர். பெரியோர் அறுகும் அரிசியும் மணமக்கள் மேல் இட்டு "அத்திபோல் துளிர்த்து, ஆல்போற் படர்ந்து, (தழைத்து) அரசுபோல் ஓங்கி, அறுகு போல் வேரூன்றி, மூங்கில் போற் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்". என்றும், 'பகவனருளால் பாங்காயிருந்து பதினாறும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க', என்றும், பிறவாறும் வாழ்த்துவர். இது 'அறுகிடல்' எனப்படும்.

### iii. பின்னிகழ்ச்சிகள்

திருமணத்திற்கு வந்தோர்க்கெல்லாம் தேங்காய் பழமும் பாக்கு வெற்றிலையும் சந்தனமும் பகிரப்பெறும். மங்கல மகளிரும் சிறுமியரும் அவற்றொடு மலரும் பெறுவர். அதன்பின் திருமண அவை கலையும். ஆயின், உற்றார் உறவினரெல்லாம் அங்கேயே யிருந்து மணவீட்டார்க்கு மொய்யும் மணமக்கட்கு நன்கொடையும் வழங்குவர். மொய்யெல்லாம் ஓலையில் எழுதப்பெறும். மணமக்கள் பெரியோர் காலில் விழுந்து வணங்குவர்.

அன்று மாலை அல்லது இரவு, ஊர்வலம் நிகழும். மணமக்கள் அவ்வக்குல மரபுப்படி, தேரிலோ, பல்லக்கிலோ, யானை குதிரை மீதோ வலம் வருவர். ஊர்வலம் முடிந்து வீடு சேர்ந்தவுடன், தேங்கா யுடைத்தும், மஞ்சள் நீரால் மணமக்கள் பாதங்களைக் கழுவியும், ஆலத்தி யெடுத்தும், கண்ணெச்சில் (கண் திருஷ்டி) கழிக்கப்படும்.

திருமண விருந்து அக்காலத்தில் வேளைக்கணக்காயிராது, நாட்கணக்காயிருக்கும். எளியர் ஒரு நாளும், செல்வர் ஏழுநாள் வரையும், விருந்தளிப்பர்.

மணமக்கள் பருவம் வந்தோராயின் அன்றே கூட்டப்பெறுவர்.

மணவிழா முடிந்தவுடன், மணமக்கட்குக் காப்புக் கழற்றப்படும்.

மணமானபின், 3-ஆம், 5-ஆம், 7-ஆம், 9-ஆம் நாட்களுள் ஒன்றில், மணமக்கள், மணமகன் வீட்டில் மணம் நடந்தால் மணமகள்

வீட்டிற்கும், மணமகள் வீட்டில் மணம் நடந்தால் மணமகன் வீட்டிற்குமாக வீடு மாறுவர். இது மறுவீடு (அல்லது மருவீடு) போதல் எனப்படும். மறுவீடு மணமகள் வீடாயின், அங்கு மணமகனுக்குச் செய்யப்படும் விருந்து, மரு அல்லது மருவு எனப் பெயர் பெறும்.

**மனையறம்**

மணவினைகளெல்லாம் முடிந்தபின், கோவலன் கண்ணகி போலும் செல்வக்குடி மணமக்களை இல்லறத்திற்குரிய பொருள்களெல்லாம் இட்டு நிரப்பப்பெற்ற ஒரு தனிமனையில் இருத்துவது மரபு. அது 'மனையறம் படுத்தல்' எனப்படும்.

சின்னாட் சென்றபின், மணமகள் பெற்றோர் மணமகன் வீடு சென்று, தம் மகள் மனையறம் நடத்தும் திறத்தைப் பார்வையிடுவதுண்டு. அது 'வீடு பார்த்தல்' எனப்படும்.

இதுகாறும் கூறியன எல்லார்க்கும் பொதுவான பருவினைச் சடங்குகள். இனி, அவ்வக்குல மரபிற்கேற்பச் சிறப்பாக நடைபெறும் நுண்வினைச் சடங்குகள் எத்தனையோ பல. விரிவஞ்சி அவை விடுக்கப்பட்டுள.

பண்டைக்கால வதுவைமணம் பற்றிய இரு பாட்டுக்கள் வருமாறு :-

1. வாயில் மறுத்த தோழிக்குத்தலைமகன் சொல்லியது.

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று

வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரோடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலின்
செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர
அகமலி உவகையள் ஆகி முகனிகுத்
தொய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீர் ஓதி மாஅ யோளே". *(அகநானூறு, 86)*

இதன் பொருள்:–

1-4. உழுத்தம் பருப்பொடு சேர்த்துச்சமைத்த கொழுமையான குழைந்த பொங்கலோடு பெரிய சோற்றுத்திரளையை உண்டல் இடையறாது நிகழ, வரிசையான கால்களையுடைய குளிர்ந்த பெரிய பந்தற்கீழ்க் கொண்டு வந்து கொட்டிய மணலைப் பரப்பி வீட்டில் விளக்கேற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு,

5-10. தீய கோள்களின் தொடர்பு நீங்கிய வளைந்த வெண்ணிலாவைக் குற்றமற்ற சிறந்த புகழையுடைய சகடம் (உரோகணி) என்னும் நாள் அடைய, மிகுந்த இருள் நீங்கிய அழகு பொருந்திய விடியற்காலையில், உச்சந்தலையிற் குடத்தையும் கையில் புதிய அகன்ற மொந்தையையும் உடைய, மணஞ்செய்து வைக்கும் ஆரவாரமுள்ள முதிய மங்கல மகளிர் முன்னே தருவனவற்றையும் பின்னே தருவனவற்றையும் முறைப்படி எடுத்தெடுத்துக் கொடுக்க,

தூய அணிகளையும் உடைய மகளிர் நால்வர் கூடி நின்று, கற்பினின்றும் தவறாது பல நற்பேறுகளைப்பெற்று, உன் கணவன் விரும்பிப் பேணும் விருப்பத்திற்கிடமாகுக என்று வாழ்த்தி, நீரோடு சேர்த்துப் பெய்த குளிர்ந்த இதழ்களையுடைய பூக்கள், அடர்ந்த கரியகூந்தலில் நெல்லோடு விளங்க,

17. நல்ல வதுவை மணம் முடிந்த பின்,

18-20. சுற்றத்தார் ஆரவார ஓசையுடன் விரைந்து வந்து, பெரிய மனைக்கிழத்தியாவாய் என்று சொல்லிச் சேர்த்து வைக்க, ஓர் அறையில் உடன் கூடிய புணர்ச்சிக்குரிய இரவில்,

21-26. முதுகை வளைத்துக் கோடிப் புடவைக்குள் ஒடுங்கிக் கிடந்த பக்கத்தைச் சார்ந்து, கட்டியணைக்கும் விருப்பத்துடன் முகத்தை மூடியிருந்த ஆடையை விலக்க, அவள் அச்சத்தோடு மூச்சுவிட்டபோது, உன் உள்ளம் நினைத்ததை ஒளியாது சொல் என்று பின்பு யான் கேட்டதினால், இனிய மகிழ்ச்சியோடு இருக்கையில்,

27-31. மானின் மடத்தோடு செருக்கையுங்கொண்ட பார்வையையும் ஒடுங்கிய குளிர்ந்த கூந்தலையும் உடைய, அம் மாநிறத்தையுடையவள், சிவந்த மணிகள் பதித்த விளக்கமான திரண்ட காதணிகள் காதில் அசைய, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியளாகி முகத்தைத் தாழ்த்தி என்னை விரைந்து வணங்கினாள்.

2. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

“மைப்புறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய

மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பினெம் உயிருடம் படுவி
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்
பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்
உறுவளி யாற்றச் சிறுவரை திறவென
ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்
உறைகழி வாளின் உருவுபெயர்த் திமைப்ப
மறைதிறன் அறியா ளாகி ஒய்யென
நாணினள் இறைஞ்சி யோளே பேணி.
..............................."

(அகம், 136)

(இ – ள்.)

1-9. நெஞ்சே குற்றமறப் பருப்புடன் கலந்து ஆக்கிய நெய்மிகுந்த வெண் சோற்றை, நீங்காத ஈகைத் தன்மையுடன் உயர்ந்த சுற்றத்தார் முதலியோரை உண்பித்து, புட்குறி இனிதாகக்கூட, தெள்ளிய ஒளியையுடைய அழகிய இடமகன்ற பெரிய வானம் களங்கமற விளங்க, திங்களைச் சகடம் கூடிய குற்றமற்ற நன்னாளில், மண மனையை அழகு படுத்திக் கடவுளை வழிபட்டு, மண மேளத்துடன் பெரிய முரசம் முழங்க, தலைவிக்கு மணநீராட்டிய மகளிர், தம் கூரிய கண்களால் இமையாது நோக்கி விரைந்து மறைய,

10-18. மெல்லிய பூவையுடைய வாகையின் அழகற்ற பின் புறத்தையுடைய கவர்ந்த இலையை, முதிய கன்று கறித்த பள்ளத்திற் படர்ந்த அறுகின், இடி முழங்கிய வானத்து முதன் மழைக்கு அரும்பிய கழுவிய நீலமணி போலும் கரிய இதழையுடைய பாவையொத்த கிழங்கிடத்துள்ள குளிர்ந்த மணமுள்ள அரும்புடன், சேர்த்துக்கட்டிய

வெள்ளிய நூலைச்சூட்டி, தூய புத்தாடையாற் பொலியச் செய்து, விருப்பத்துடன் கூடி, மழையோசை போன்ற மணவோசை மிகுந்த பந்தலில் அணிகளை மிகுதியாய் அணிந்திருந்ததினால் உண்டான வியர்வையை விசிறியால் ஆற்றி, அவள் சுற்றத்தார் அவளை நமக்குத் தந்த முதல் நாள் இரவில்,

19 -26. வெறுத்தலில்லாத கற்போடுகூடி என் உயிருக்கு உடம்பாக அடுத்தவள், கசங்காத புதுப்போர்வையைத்தன் உடல் முழுதும் போர்த்திக்கொண்டதால், மிகுந்த புழுக்கத்தையடைந்த உன் பிறை போன்ற நெற்றியில் அரும்பிய வியர்வையை, மிகுந்த காற்றுப்போக்குமாறு, சிறிது திற என்று அன்புமிக்க நெஞ்சத்தோடு போர்வையைக் கவரவே, உறையினின்று உருவிய வாளைப்போல் அவள் உருவம் வெளிப்பட்டு விளங்க, அதை மறைக்கும் வகை அறியாதவளாகி, விரைந்து நாணி விருப்பத்தோடு வணங்கினாள்.

குறிப்பு:- 'மைப்பறப்புழுக்கி' என்றும் பாடம். புழுக்கி-அவித்து.

'வானூர் மதியஞ் சகடணைய' என்று சிலப்பதிகாரத்தும் வந்திருப்பதால், திங்களைச் சகடணையும் நாள் திருமணத்திற்குச் சிறந்த நன்னாளாகக் கொள்ளப்பட்டதாகத் தெரிகின்றது.

முந்தின பாட்டிற்போன்றே இதிலும், திருமணநாளன்றே மணமக்கள் கூட்டப்பெற்றார் என்று குறித்திருப்பதைக் கவனிக்க.

---

## II இடைக்கால மாறுதல்கள்

பிராமணர் பெருந்தொகையினராய்த் தமிழகம் வந்து சேர்ந்த பின், தமிழர் திருமணங்களிற் பல மாறுதல்கள் ஏற்பட்டன.

### 1. பிராமணப் புரோகிதமும் வடமொழிக் கரணமும்

பிராமணர் தேவர்வழி வந்த நிலத்தேவர் (பூசுரர்) என்றும்; அவர் முன்னோர் மொழியாகிய வேதமொழியும் அதனொடு வேதகால இந்திய வட்டாரமொழிகளாகிய பிராகிருதங் கலந்த இலக்கிய மொழியாகிய சமற்கிருதமும், தேவமொழியென்றும்; இரு பெருந் தவறான கருத்துக்கள் கடைச்சங்கக் காலத்திலேயே அரசர் உள்ளத்தில்

ஆழ வேரூன்றிவிட்டதனால், பிற்காலத்தில் பிராமணப்புரோகிதம் தமிழகத்தில் விரைந்து பரவுவதற்கு மிகுந்த வசதியாயிருந்தது.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், சேரன் பல்யானைச் செல் குழுகுட்டுவனும் போன்ற தமிழ் வேந்தரும் பிற சிற்றரசரும், பிராமணரை நிலத்தேவரினும் மேலாகத் தேவரென்றேகொண்டு, அவர் சொன்னதையெல்லாம் நம்பி அவர் ஏவியதையெல்லாம் இயற்றி, வடமொழி மந்திரம் வரையிறந்த வலிமையுள்ளதென்றும், இறைவன் செவிக்கு எல்லையற்ற இன்பந்தருவதென்றும், ஆரிய வேள்விக ளெல்லாம் தப்பாது ஒருவனை உயர்கதிக்குச் செலுத்தும் என்றும், தெய்வத்தன்மையுள்ள வடமொழி மந்திரத்தைத் தெய்வத்தன்மை யுள்ள பிராமணனே ஓதவல்லானென்றும், பிறர் அதை ஓதினால் அதன் ஆற்றல் கெடுமென்றும், தமிழருள் உயர்ந்தோர்மட்டும் அதைக் காதாற் கேட்கவும் அதனாற் பயன்பெறவுந் தக்கவர் என்றும், தமிழ் மக்கள் நம்புமாறு செய்துவிட்டனர். 'மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி' அன்றோ!

பிராமணர் முதலாவது சிறு தொகையினராயிருந்ததினால், அரசரிடத்துமட்டும் ஆரியக்கரணமும் சடங்கும் ஆற்றிவந்தனர். பின்பு சற்றுத் தொகைமிக்கபின், பெருஞ்செல்வரான பெரு வணிகர்க்கும் ஆற்றிவந்தனர். அதன் பின், தொகை மிகமிகச் சிறுவணிகர்க்கும் உயர் வேளாளர்க்கும் ஆற்றத் தலைப்பட்டனர். அதனால், பெரும்பாலும் ஒவ்வொரு பேரூரிலும் ஒரு பிராமணன் குடியமர அல்லது அமர்த்தப் பட நேர்ந்தது. ஓர் ஊர்க்குப் பொதுவாயிருந்து அவ்வூரிலுள்ள உயர்ந்தோர் சடங்குகளையெல்லாம் ஆற்றி வந்த பிராமணன், ஊர்ப்பார்ப்பான் எனப்பட்டான். பிராமணன் குடியிராத ஊர்ச் சடங்குகளை, அடுத்தவூர்ப் பார்ப்பான் வந்து செய்வது வழக்கம்.

ஆரியக்கரணத்தால் விளைந்த தீமைகள்

**(1) தமிழுக்கும் தமிழனுக்கும் தாழ்வு**

வடமொழி வழிபாட்டு மொழியும் சடங்கு மொழியுமாய் வழக்கூன்றியபின், தமிழ் அவற்றிற்குத் தகாததென்று தள்ளப்பட்டுத் தன் பழந் தலைமையை இழந்ததுடன், தாழ்வும் அடைந்தது. வட

சொற்களைச் சொன்னால் உயர்வும் தென் சொற்களைச் சொன்னால் தாழ்வும் உண்டாகுமென்ற தவறான கருத்து, தமிழ்மக்கள் உள்ளத்திற் புகுந்ததினால், வடசொற்கள் ஒவ்வொன்றாய் வழக்கிற் புகுந்து, ஆயிரக்கணக்கான தூய தமிழ்ச் சொற்களை வழக்கு வீழ்த்திவிட்டன.

தமிழுக்கு நேர்ந்த தாழ்வு தமிழனுக்கும் நேர்ந்தது. அதனால், பிராமணன் தொட்டதை எல்லாத் தமிழரும் உண்ணலாமென்றும், எத்துணை உயர்ந்த தமிழனாயினும், அவன் தொட்டதைப் பிராமணன் உண்ணக் கூடாதென்றும் கூட்டரவு (சமுதாய) ஏற்பாடுகள் எழுந்தன. இது தமிழன் பொருளியல் வாழ்வை மிகமிகத் தாக்கிற்று.

சில தூய தமிழ்க்குலத்தார், தமிழன் உயர்வையும் வரலாற்றையும் அறியாது, தம்மைச் சத்திரியரென்றும் வைசியரென்றும் சொல்லித் தமக்கு ஆரியத் தொடர்பு கோரவும், சில உயர் வேளாளர் தம்மைச் சற்சூத்திரர் என்றழைத்து, தம்மை உயர்த்துவது போற் கருதிக் கொண்டு உண்மையில் தாழ்த்தவும், நிலைமை ஏற்பட்டு விட்டது.

தமிழருள் உயர்ந்தவராகக் கருதப்பெறும் நெல்லை மரவூண் (சைவ) வேளாளரும் பிராமணருக்குக் கீழ்ப்பட்டுவிட்டதனால், தமிழரெல்லாரும் தாழ்த்தப்பட்டுவிட்டனர். இன்று தாழ்த்தப்பட்டவர் எனப்படுவார் உண்மையில் ஒடுக்கப்பட்டவரே.

### (2) தமிழப்பார்ப்பாருக்குப் பிழைப்பின்மை

பிராமணப் புரோகிதர், உயர்ந்தோரின் அல்லது உயர்த்தப்பட்டோரின், எல்லா மதவியற் சடங்குகளையும் ஆற்றும் தகுதியை முற்றூட்டாகப் பெற்றுவிட்டதினால், தமிழப்பார்ப்பார் பலர்க்குப் பிழைப்பில்லாது போயிற்று.

### (3) சிறுதெய்வ வழிபாடு

தமிழருள் உயர்ந்தோர், சிறுதெய்வ வணக்க நிலையும் பெருந்தெய்வ வணக்க நிலையும் கடந்து, முழுமுதற்கடவுள் வணக்க நிலையை அடைந்தவர். அங்ஙனமிருப்பவும், இன்று ஆரியக் கரணத்தால், கதிரவன், திங்கள், வருணன், தீ முதலிய இயற்கைப் பொருள்களையும் கோள்களையும் பூதங்களையும், வணங்கும், முந்தியல் நிலைமைக்குக் கொண்டுவரப்பட்டுவிட்டனர்.

(4) கற்பிழுக்கக் கூற்று

பிராமணப் புரோகிதன், மணமகனை நோக்கி, "நீ முதல் நாள் திங்களுக்கும் (சோமனுக்கும்), இரண்டாம் நாள் யாழோருக்கும் (கந்தருவருக்கும்), மூன்றாம் நாள் தீக்கும் (அக்கினிக்கும்), உன் மனைவியை அளித்துவிட்டு நாலாம் நாள் அவளை நுகர்வாயாக" என்று கூறும் கரணவுரைப் பகுதி

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை".

என்று கொள்ளும் தமிழன் கற்புணர்ச்சிக்கு மிகமிக இழுக்குத்தருவ தொன்றாம். அதிலும் "திங்கள் நுகர்ந்துவிட்டு யாழோர்க்குத்தர, யாழோர் நுகர்ந்துவிட்டுத் தீக்குத்தர, தீ நுகர்ந்துவிட்டு உனக்குத்தர, நீ அவளைப் பெற்று நுகர்வாயாக" என்று மணமகள்மேற் பிறர்க்கு முன்னுரிமையும் மணமகனுக்குப் பின்னுரிமையுந் தோன்றக் கூறுவது, எவ்வகையினும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.

வித்துவசன கோலாகலன் என்னும் ஆக்கியாழ்வானுக்கும் ஆளவந்தார்க்கும் குலோத்துங்கச்சோழன் (?) அவைக்களத்தில் நிகழ்ந்த தருக்கத்தில், ஆளவந்தார் மேற்கூறிய கற்பிழுக்கக் கூற்றைச் சான்று காட்டி, சோழன் தேவி கற்பிழந்தவள் என்று நாட்டியபோது, அரசனும் அரசியும் உட்பட அவையோர் அனைவரும் பாராட்டியது, தமிழனுக்கு அழியாப்பழியைத் தருவதாம்.

(5) வீண் சடங்குகள்

தீ வலஞ்செய்தல், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டல் முதலிய பல சடங்குகள் வீணானவையாகும்.

அம்மி மிதித்தல், அகலிகை சாவக்கதையை நினைப்பித்து மணமகளை எச்சரிக்கும் சடங்காகச் சொல்லப்படுகின்றது. அம்மியைத் திருமகள் தங்கும் பொருள்களுள் ஒன்றாகக் கொள்வதினால், அதை மிதிக்கும் வழக்கம் இயல்பாகத் தமிழர்க்கில்லை. அது கட்டுக்கழுத்தியின் அடையாளமென்று தமிழப்பெண்டிர் கூறுகின்றனர். அம்மியும் குழவியும் தாயையுஞ் சேயையுங் குறித்து மணமகள் மகப்பேற்றை முன்னோக்குவன வென்றும், சிலர் கூறுவதுண்டு.

எங்ஙனமிருப்பினும், சமையற்கின்றியமையாத அம்மி உணவுத் தட்டற்ற நல் வாழ்வைக் குறிப்பதென்று கொள்வது, குற்றமாகாது. ஏதோவொரு நற்குறிப்பினதாக மணவறையிற் கொண்டுவந்து வைக்கப்பெறும் அம்மிக்கும், அழகிய கோலமிடப்பெறும் ஆயிரங் கண்ணுப் பானைக்கும், பொருத்தமாக ஓர் ஆரியத்தொடர்புக்கதை கட்டப்பட்டதாகத் தெரிகின்றது. அகலிகை சாவத்தைக் குறிப்பதற்குப் பொதுவகையான கல் போதுமே! அவள் கல்லாகச் சாவிக்கப்பட்டாள் என்றல்லாது, அம்மியாகச் சாவிக்கப்பட்டாள் என்று கதை கூற வில்லையே! மேலும், கொங்கு வேளாளர் திருமணத்தில் மணமனைக்கு வெளியே அம்மி நிறுத்தப்பட்டு, நாட்டுக்கல் எனப் பெயர்பெற்றுப் பூசையுடன் வணங்கப்பெறுகின்றது.

இனி, பிராமணர் திருமணத்தில், மணமகள் ஒரு கல்லை மிதிக்கும்போது, மணமகன் "ஓ பெண்ணே! இக்கல்லை மிதி. இதைப்போல் உறுதியாயிரு. உனக்குத் தீங்கு செய்ய நாடுவாரை அழித்துவிடு. உன் பகைவரை வெல்". என்று மணமகளை நோக்கிக் கூறுவதும், இங்குக் கவனிக்கத்தக்கது.

அருந்ததி காட்டல் என்பதும் ஆரியத் தொடர்பு கருதியதே. தமிழ மரபுப்படி அருந்ததி தலையாய கற்பரசி யல்லள். அவள் தன் கண வனாகிய வசிட்டமுனிவன் ஒழுக்கத்தைப்பற்றி ஐயுற்று, அவனால் விண்மீனாகச் சாவிக்கப்பட்டாள் என்று கதை கூறுகின்றது. தமிழப் பத்தினிப் பெண்டிரோ, 'கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை', என்னுங் கொள்கையினர். ஆதலால், ஆதிமந்தியார், பூதப்பாண்டியன் தேவியார், கண்ணகியார், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் தேவியார், திலகவதியார் முதலிய எத்துணையோ தலையாய தமிழகக் கற்புத் தெய்வங்களிருக்கவும், அவரை விட்டுவிட்டு அருந்ததியை நினைப்பித்தல், கனிருப்பக் காய் கவர்ந்தற்றே.

(6) கரணம் விளங்காமை

மக்கள் ஆறறிவுடையார். அதனால் எதைச்செய்யினும் அறிவோடு செய்தற்குரியர். ஒருவர் வாழ்க்கையில் தலைசிறந்த நிகழ்ச்சியாயும், இருவர் இன்ப வாழ்விற்கு அடிகோலுவதாயும், பலர் மகிழ்ச்சியுறுதற்குரிய காட்சியாயும், நூற்றுக்கணக்கான மக்கள் வந்து

கூடுவதாயும், உள்ள திருமணச்சடங்கைப் புரோகிதனுக்கன்றி பொருளொடு ஓது கின்றானா பொருளில்லாது உளறுகின்றானா என்பதையும் அறிய வியலாத நிலையில், இவ்விருபதாம் நூற்றாண்டிலும், குருட்டுத்தனமாக நடத்திவருவது, நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் முற்றும் முரணானதாம்.

**2. குலக்கட்டுப்பாட்டு மிகை**

தொழில்பற்றிய குலப்பாகுபாடு தொன்றுதொட்டுத் தமிழகத்தில் இருந்துவந்ததேனும், தமிழ இனம் ஒற்றுமை குலைந்து சின்னா பின்னமாய்ச் சிதைதற்கும், அயலார் எளிதாய்ப் படையெடுத்துவந்து கைப்பற்றுதற்கும், வழிவகுத்தது, பிற்காலத்தில் பிறப்பொடு தொடர்பு படுத்தப்பட்ட வருணாசிரம தருமம் என்னும் ஆரியமுறைக் குலப்பிரிவினையால் விளைந்த குலவெறியே. இதனாலேயே, 'குரங்கானாலும் குலத்திலே கொள்'. 'பழங்காலைத் தூர்க்காதே, புதுக்காலை வெட்டாதே', எனப்பல தீய கொள்கைகள் பிறந்தன. 'திரைகடலோடியுந் திரவியந் தேடு' என்னும் தாளாண்மை மிக்க நாட்டில், கடல் தாண்டக்கூடாதென்றும், ஆறு தாண்டக்கூடாதென்றும், கட்டுப்பாடுகள் எழுந்தன.

ஒரே குலத்திற்குள் திரும்பத்திரும்ப மணஞ் செய்து வந்ததினால், அறிவாற்றல் மிக்க பிள்ளைகள் அருகிப் பிறந்தன.

அண்டாமை, தீண்டாமை, காணாமை முதலிய கூட்டரவுக் கொடுமைகளெல்லாம், இவ் இடைக்காலத்தில்தான் தலைவிரித்துத் தாண்டவமாடின.

**3. பொருந்தா மணமும் வீண்சடங்கும்**

குலவெறி மெல்ல மெல்லச் சுற்றவெறியை உண்டுபண்ணிற்று. ஒரு முறைக்காரப் பெண்ணுக்கு அல்லது ஆணுக்கு, எங்கே வேறிடத்தில் மணம் முடிந்துவிடுகின்றதோ என்னும் அச்சத்தினால், பிள்ளைப் பருவத்திலேயே அவர்க்கு மணம் செய்து வைப்பது வழக்கமாய்விட்டது. சிலர் தொட்டிற் குழந்தைக்கும் மணஞ் செய்து வைத்ததுண்டு. அது தொட்டில் மணம் என்னப்பட்டது. ஒருத்தி கன்னியாய் இறந்தால் தீக்கதியடைவாள் என்னும் ஆரியக்கொள்கையும், இளமை மணத்திற்குக் காரணமாயிற்று.

'ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு' ஆதலால், மணஞ்செய்து வைக்கப்பட்ட பிள்ளை மணமகன், மணமகள் பூப்படையுமுன் இறந்துவிடுவதுமுண்டு. அவனால் மணக்கப்பட்ட சிறுமி உண்மையில் அவனை மணந்திராவிட்டாலும், மணந்ததுபோன்றே கருதப்பட்டுக் கைம்பெண்ணாய்விடுவாள். கைம்பெண் மணஞ்செய்யுங் குலமாயின், அவட்கு மணவாழ்க்கையுண்டு. அதிலும் புதுப்பெண்மையை இழந்தேயிருப்பாள். கைம்பெண் மணஞ்செய்யாக் குலமாயின், அவட்கு மணவாழ்க்கை இல்லவேயில்லை. காலமெல்லாம் அமங்கலியாய்க் கருதப்பட்டு, பூப்படைந்தபின் காமவுணர்ச்சியடக்கும் கரையற்ற துன்பத்திற்கோ, ஒழுக்கக்கேட்டிற்கோ உரியவளாவாள். பிறபெண்டிர்போல் ஒரு கணவனொடு கூடி வாழவும், பூச்சூடவும், மங்கல வினைகளிற் கலந்துகொள்ளவும், வெளிப்படையாய்ப் பிள்ளை பெறவும், இன்பநுகரவும், உரிமையற்றவளாய், தன் வாழ்நாள் முழுவதும் உலக வாழ்க்கையை ஒரு சிறைவாழ்க்கையும் அளற்று (நரக) வாழ்க்கையுமாகவே கழித்து, சொல்லொணாத துன்புறுவாள்.

பிள்ளை மணமகன் தன் சிறு மனைவி பூப்படைந்து தன்னொடு கூடிவாழும்வரை இறவாதிருப்பினும், நீடித்துவாழும் நிலைமை யில்லாக்கால், மேற்கூறிய துன்பங்களே நேரும். பூப்படைந்தபின்னரே மகளிர்க்கு மணஞ்செய்துவைப்பின், இத்தகைய துன்பங்களினின்று பெரும்பாலும் தப்பியுய்வர்.

பிள்ளைப் பருவத்தில் மணஞ் செய்து வைப்பதால், மனைவி பூப்படைந்தவுடன் கணவனொடு கூடிவாழ நேரும். உடல் முழு வளர்ச்சியடையுமுன் கருக்கொள்ளும் மகளிர், தலைமகப் பேற்றில் இறந்துவிடுவதுமுண்டு. அங்ஙனம் இறவாதிருப்பினும், பிறக்கும் பிள்ளை உரனுள்ளதாயும் நீடுவாழியாயும் இருப்பதில்லை; தாயுடலும் தளர்ந்துவிடுவதுண்டு;

பூப்படையுமுன் மணஞ்செய்து வைத்தாலும் பூப்படைந்தவுடன் மணஞ்செய்து வைத்தாலும், மகளிரின் இளமையைப் பொறுத்த வரையில், இரண்டும் ஒன்றே. பூப்படைந்தவுடன் எல்லா மகளிர்க்கும் காமவுணர்ச்சி ஏற்பட்டுவிடுவதில்லை. இதனால், மணம் நிகழ்ந்த பின்பும் கூட்டநாள் தள்ளிவைக்கப்படுகின்றது. இது சேர்வு மணம் (சாந்தி கலியாணம்) அல்லது சேர்வு முழுத்தம் (சாந்தி முகூர்த்தம்) என்னும் வீண் சடங்கிற்குக் காரணமாயிற்று.

காமக் குறிப்பும் சேர்க்கைத் துணிவும் இல்லாத இளம்பருவ ஆணிற்கும் பெண்ணிற்கும் மணஞ்செய்து வைப்பதினாலேயே, அவற்றை அவர்க்கு ஊட்டும்பொருட்டு, நலங்கிடல், உணவூட்டல், வெற்றிலை மடித்துக் கொடுத்தல், அப்பளந்தட்டல், ஒற்றையா இரட்டையா பிடித்தல், பூச்செண்டெறிதல், எழுத்தாணியெடுத்தல், ஒளிந்து விளையாடல், மோதிரம் எடுத்தல், பிள்ளையார் அல்லது பொம்மை கொடுத்தல், ஊஞ்சலாடல், கோபித்துக்கொண்டு போன மணமக்களை அழைத்துவரல், மஞ்சள் நீராடல் முதலிய பல வினையான சடங்குகள் ஏற்பட்டன. மணவாழ்க்கைக்கேற்ற வளர்ச்சியடைந்த பருவத்தில் மக்கட்கு மணஞ்செய்து வைத்தால், அவர் பிறர் துணையின்றித் தாமாகவே கூடி வாழ்வர்.

சில தமிழக்குலத்தார் மணவறையில் திரைகட்டித் தாலி கட்டுவது, மகமதியர் இந்நாட்டிற்கு வந்தபின் ஏற்பட்ட பயனற்ற செயலாகும்.

இனி, வளர்ச்சியடைந்த மக்கட்கு மணஞ்செய்து வைத்த விடத்தும், அவர் விருப்பத்தைக் கேளாது பெற்றோர் தம் விருப்பப் படியே இசையாத இளைஞனையும் இளைஞையையும் இணைத்து வைத்து, பின்பு அவர் துன்புறும்போது 'தாரமுங் குருவுந் தலைவிதி' என்றும், 'கழுத்தில் விழுந்தமாலை கழற்ற முடியாது' என்றும், 'அடுப்பில் வைத்த கொள்ளி எறிந்து தான் தீரவேண்டும்' என்றும், கூறுவது அவர் மடமையைக் கோடிட்டுக் காட்டுவதேயாகும்.

இனி மணமக்களின் ஒத்தவளர்ச்சியை ஒரு சிறிதும் கவனியாது, ஒரு சிறுவனுக்கு ஒரு பெரும் பெண்ணை மணஞ்செய்து வைத்து மாமனே அவளுக்குக் கணவனாவதும், ஒரு முழு வளர்ச்சியடைந்த முரடனைக் கண்டு அஞ்சிச்சாகுமாறு, அவனுக்கு ஒரு மங்கைப் பருவத்து மெல்லியலை மணம் புணர்ப்பதும், இடைக்காலத்து நிகழ்ந்துவந்த கொடுஞ் செயல்களாம்.

பழஞ்சேர நாடாகிய மலையாள நாட்டில், பூப்பின்முன் 'தாலிகட்டு' என்னும் பொய் மணமும், பூப்பின்பின் 'சம்பந்தம்' என்னும் மெய்ம் மணமும், ஆக இருமணம் ஒவ்வொரு பெண்ணிற்கும் சில குலத்தில் நேர்ந்ததற்குக்காரணம் ஆரியமே.

---

## III திருமணச் சீர்திருத்தம்

### 1. சீர்திருத்த இயக்கம்

இடைக்காலத்தில் தமிழ் மரபிற்கொவ்வாத பல ஆரிய முறைகளும் சடங்குகளும் தமிழ் மணங்களிற் கலந்துவிட்டதனாலும், அவற்றால் தமிழுக்கும் பல தீமைகள் விளைந்ததினாலும், அவற்றைக் களைந்து தமிழ் மணத்தைத் திருத்தற்குப் பல சீர்திருத்தத் தலைவர் தோன்றினர். அவருள் நாயகமானவர் நால்வர். அவராவார்:-

#### (1) சித்தூர் மார்க்கசகாய ஆச்சாரியார்

இவர் சென்ற நூற்றாண்டில் சித்தூர் மாவட்டத்தில் தோன்றியவர்; பொற்கொல்லர் வகுப்பினர்; வடமொழி வேத இதிகாச புராணங்களை நன்றாய்க் கற்றவர். இவர், கம்மாளர் விசுவப்பிராமணர் என்றும், வடமொழி வேதப்படி விசுவப்பிராமணரே திருமணம் நடத்திவைக்கவேண்டுமென்றும், பிராமணர் மக்களை ஏமாற்றித் தொன்றுதொட்டு நடந்துவந்த முறையினை இடையில் மாற்றிவிட்டன ரென்றும், போராடி, ஒரு திருமணத்தை வடமொழியில் நடத்தி வைக்கத் தொடங்கியபோது, பஞ்சாங்கம் குண்டையர் என்னும் பிராமணப் புரோகிதர் வந்து தடுத்தார். மார்க்கசகாய ஆச்சாரியார் அவருக்கு இணங்காததினால் கலகம் உண்டாயிற்று. அதன் விளைவாய் ஒரு நடுவர் குழுக் கூடிற்று. அதன் முன்னிலையில், பஞ்சாங்கம் குண்டையர் வினவிய வினாக்கட்கெல்லாம் மார்க்கசகாய ஆச்சாரியார் உடனுடன் தக்க விடை விடுத்துவிட்டதனால், ஆச்சாரியார்பக்கம் முடிவு செய்யப்பட்டது. அதன்பின்னும் பஞ்சாங்கம் குண்டையர் விடாமல், முறையே, கீழ் முறையாளர் (Sub Magistrate) மன்றத்திலும், மாவட்ட மன்றத்திலும், வழக்குத் தொடுத்தார். அங்கும் வினவிய வற்றிற்கெல்லாம் தக்கவாறு விடுத்து விட்டதனால், ஆச்சாரியார் பக்கமே தீர்ப்பாயிற்று. இப்போராட்டமும் வெற்றியும், 'சித்தூர் அதாலத்துக் கோர்ட்டுத் தீர்ப்பு' என்னும் தலைப்பில் புத்தக வடிவாய் வெளியிடப்பட்டுள.

#### (2) மறைமலையடிகள்

இவர் தனித்தமிழ் இயக்கத் தலைவராதலால், ஆரிய மொழியை அறவே அகற்றி, திருமணக்கரணமொழி முழுவதையும் தூய தமிழில்

அமைத்துக்கொண்டார். வேள்வி வளர்த்தலும் தீவலம் வருதலும் மணவறையில் மங்கலப் பொருள் வைத்தலும், இவரால் விலக்கப் படவில்லை.

**(3) திரு.வி.கலியாணசுந்தரனார்**

இவரும் மறைமலையடிகள் போன்றாரே. ஆயின், அடிகள் கரணமொழியில் மருந்திற்கும் வடசொல் காண்பதரிது; இவர் மொழியிலோ ஒரோவோர் இடத்தில் வடசொற் கலக்கும். இதுவே இவர்தம்முள் வேற்றுமை

எனினும், பிறர்மொழிபோல் மணிப்பவள மாலையும் பன்மணிக் கோவையுமாயிராது, வடசொல் அருகிவரப் பெறுவதே மணவழகனார் (கலியாண சுந்தரனார்) மொழியும் என்க.

**(4) ஈ.வே.இராமசாமிப் பெரியார்**

இவர், ஆரியக்கரணத்தையும் மணவறை யமைப்பையும் கடவுள் வழிபாட்டையும் மணச்சடங்குகளையும் விலக்கி, பொது மக்கள் தமிழில் வாழ்க்கை ஒப்பந்தத்தை வகுத்துத் தந்தவர். இவர் செய்த மாறுதல்களுள், கடவுள்வழிபாட்டு விலக்கு நம்பா மதத்தாராலேயே யன்றி நம்புமதத்தாரால் சீர்திருத்தமாகக் கொள்ளப்பெறாது.

இங்ஙனம், மார்க்கசகாயர் பிராமணியத்தையும், மறைமலை யடிகளும் கலியாணசுந்தரனாரும் அஃதுடன் ஆரிய மொழியையும், ஈ.வே.ரா. அவற்றோடு வீண் சடங்குகளையும், விலக்கித் திருமணக் கரணத்தைத் திருத்தியவராவார்.

**2. பெற்றோர் கவனிக்க வேண்டியவை**

மணமக்கள் பெரும்பாலும் உலகியலறியா இளமையராதலானும், மணவாழ்க்கை ஆயிரங்காலத்துப் பயிராதலானும் இளமை எளிதாய் உணர்ச்சி வயப்பட்டுக் கெட்டுவிடுதலானும், திருமணப் பொறுப்பை முற்றும் மணமக்களிடத்தில் விட்டுவிடாது, பெற்றோர் முற்படவே விழிப்பாகவும் எச்சரிக்கையாகவுமிருந்து பின்வரும் பன்னிரு கடமைகளை ஆற்றல்வேண்டும்.

**(1) பால்நிலை கவனித்தல்**

சில பெற்றோர், ஆணுடம்பு கொண்டாரெல்லாம் ஆண்மையரென்றும், பெண்ணுடம்பு கொண்டாரெல்லாம் பெண்மையரென்றும், கருதி, அவர் பாலியல்பு அற்றிருப்பதையும் திரிந்திருப்பதையும் கவனிப்பதேயில்லை.

ஆண்மை திரிந்து பெண்மை கொண்டவன் பேடி; பெண்மை திரிந்து ஆண்மை கொண்டவள் பேடன்; இவ்விருவர்க்கும் பொதுப் பெயர் பேடு; இருபாலும் அல்லாதது அலி. இம்மூவர்க்கும் மணமே வேண்டியதில்லை.

இனி, இருபாலுள்ளும், பாலுணர்ச்சியோ சேர்க்கை விருப்பமோ ஒரு சிறிதும் இல்லாதவருமுண்டு. அவர்க்கும் மணம் வேண்டுவதில்லை.

ஆண்மை திரியாதவருள்ளும் பல தீய பழக்கங்களால் சேர்க்கையாற்றல் இழந்தவர் சிலர். அவர்க்கு மணஞ்செய்துவைப்பின், அவர் மனைவியர் ஒழுக்கங்கெடவேண்டும்; அல்லது கணவர்க்குக் கட்டுப்பட்டுக் காலமெல்லாம் எரிந்து வேகவேண்டும்.

ஒரோவொரு பெண் ஒருபோதும் பூப்படைவதில்லை. அவர்க்கும் மணம் வேண்டுவதில்லை.

மக்கள் தொகை மிக்குள்ள இக்காலத்தில், மணங்களை எத்துணைக் குறைத்தல் முடியுமோ அத்துணைக் குறைத்தல் வேண்டும்.

**(2) பன்னிரு பொருத்தம் பார்த்தல்**

i. காதற் பொருத்தம்

மணமக்கட்கு முதன்மையாக வேண்டும் பொருத்தம் இதுவே. இஃதில்லாவிடின், ஏனைச் சிறப்பெல்லாமிருந்தும் ஏதும் பயனில்லை. ஆதலால், மணமக்கள் இசைவு பெற்றே அவர் பெற்றோர் அவர்க்கு மணஞ்செய்து வைத்தல் வேண்டும்.

ii. உடல்நலப் பொருத்தம்

மணமக்கள் இன்பந் துய்த்தற்கும் இல்லறம் நடத்தற்கும் இன்றியமையாதது உடல் நலம். சில நோய்கள் மறைவாயிருக்கும்,

அல்லது மறைக்கப்பட்டிருக்கும். ஆதலால், தக்க மருத்துவப் பண்டிதரைக் கொண்டு மணமக்களை நோட்டஞ்செய்தல் வேண்டும். அல்லாக்கால், ஒருவரால் இன்னொருவர் நோய்ப்படுவதுடன், அவர்க்குப் பிறக்கும் பிள்ளைகளும் வழிவழி நோய்ப்பட்டு வருந்தவேண்டியிருக்கும்.

### iii. ஒழுக்கப் பொருத்தம்

நல்லொழுக்கத்தில் துப்புரவும் (சுத்தமும்) அடங்கும். ஒழுக்கப் பொருத்தமில்லாக்கால், ஔவையார்க்கமுது படைக்கச்சொன்னவனும் குண்டலகேசியும்போல் துன்புற நேரும்.

### iv. கருத்துப் பொருத்தம்

கட்சி மதம் முதலியவற்றிற் கருத்தொத்தலும், வேறுபடின் அவ்வேறுபாட்டிற்கு இடந்தரலும் கருத்துப்பொருத்தமாம். உயர்ந்த பண்பாட்டினராயின், கணவனும் மனைவியும் வெவ்வேறு மதத்தினராயுமிருக்கலாம்.

### v. உண்டிப் பொருத்தம்

மரவுணவும் புலாலுணவும் ஆகிய இரண்டனுள்ளும் ஒன்றில் ஒத்திருத்தலும், ஒவ்வாது வேறுபடின் அவ்வேறுபாட்டிற்கு இடந்தரலும் உண்டிப் பொருத்தமாம்.

### vi. அகவைப் பொருத்தம்

மணமக்கள் உடல் நல்வளர்ச்சியடைந்தபின் மணந்தால் தான், நன்மகப் பேறுண்டாவதுடன் தாய்க்குஞ் சேதமின்றாம். அதே சமையத்தில், இளமை கழியுமுன் மணந்தால் தான், இன்பச்சிறப்பும் பிற வசதிகளும் உண்டாகும். ஆதலால், பின்வருமாறு மணமக்கள் அகவை கவனிக்கப்பெறின் நலமாம்.

| | சிற்றெல்லை | இடையெல்லை | பேரெல்லை |
|---|---|---|---|
| மணமகன் அகவை | 20 | 22 | 25 |
| மணமகள் அகவை | 16 | 18 | 20 |

இந்நாடு வெப்ப நாடாதலால், குளிர்நாடுகளிற்போல் இளமையர் நீண்டநாள் மணவாதிருத்தல் இயலாது. ஆதலால், மக்கள் பேரெல்லையகவை அடைந்தவுடன், பெற்றோர் அவர்க்கு மணஞ்செய்து வைத்தல் நல்லது.

தக்க பருவத்தில் மணஞ்செய்து வையாமையால், இளைஞரும் இளைஞையரும் பல தீய பழக்கங்கட்கு ஆளாய்விடுகின்றனர். இதனால் இளைஞர் கொடிய நோய்களை அடைவதுடன், சேர்க்கை யாற்றலையும் இழந்துவிடுகின்றனர். ஆண்மையொன்றே ஆடவர்க்குச் சிறப்பு. அதனால் இன்புறுந் திறன்மட்டுமின்றி அகக்கரண வலிமையும் வாழ்நாளும் மிகுகின்றன. ஆதலால், ஆண்மையிழந்துவிடின் ஆடவனுக்கு வாழ்க்கையில்லை. அதன்பின், இருநிதிக்கிழவனாயினும் ஈடிலா அரம்பையைப் பெறினும் என்ன பயன்?

மேலும், பிந்தி மணஞ்செய்வதால், பிள்ளைகளுந் தலையெடுக்காமல் பெற்றோரின் முதுமையிற்சின்னதுஞ்சிறியது மாயிருந்து, குடும்பம் மிகமிக இடர்ப்படுகின்றது.

இவற்றையெல்லாம் நோக்கி, இனிமேலாயினும், பெற்றோர் தம் பிள்ளைகட்குத் தக்க பருவத்தில் மணஞ் செய்துவைப்பாராக.

### vii. உருவப் பொருத்தம்

மணமக்கள் வளர்த்தியிலும் பருமனிலும் அழகுத்தரத்திலும் ஒத்திருப்பது உருவப் பொருத்தமாம். மணமகனிலும் மணமகள் குட்டையாயும் ஒல்லியாயும் இருக்கலாம். இதற்கு மாறாயிருத்தல் கூடாது.

அழகு இன்பத்தை மிகுத்துக் காட்டுவதால், அழகுணர்ச்சியுள்ள மணமக்கட்கு இயன்றவரை அழகுள்ள வாழ்க்கைத்துணையே அமர்த்தல்வேண்டும்.

மணமக்கள் உறுப்புக் குறையில்லாதிருத்தலும் உருவப் பொருத்தமாம். சில பெற்றோர், தம் மகனின் அல்லது மகளின் உறுப்புக் குறையை ஆடையணிகளால் மறைத்து வைப்பதுண்டு. அதை நன்றாய்க் கவனித்தல் வேண்டும்.

viii. கல்விப் பொருத்தம்

மணமக்கள் இருவரும் கற்றோராயிருக்கலாம்; அல்லது மணமகன் மட்டும் கற்றிருக்கலாம். மணமகள் கற்றும் மணமகன் கல்லாதும் இருத்தல் கூடாது. மணமகள் மணமகனினும் மிகுதியாகக் கற்றிருத்தலும், செருக்கிற்கும் ஒத்துழையாமைக்கும் காரணமாயின் நன்றன்று.

மணமகள் இன்றியமையாது கற்றிருக்க வேண்டிய நூல்கள் உடல் நூலும் (Sciences), கருநூலும் (Physiology), பிள்ளை வளர்ப்பு நூலும் (Embryology) ஆகும்; கலைகள் (Arts) சமையலும் தையலும் இசையுமாகும். பொருத்தம் பார்ப்பது மணமக்கள் இசைந்து இனிதாய் இல்லறம் நடக்கற்பொருட்டேயாதலின், அவ் இசைவுபாட்டிற்குக் காரணமான எல்லா நிலைமையும் பொருத்தமே.

ஒரு மனைக்கிழத்தியார் எத்துணையுயர்ந்த கல்விப் பட்டங்கள் பெற்றிருப்பினும், சமையல் தெரியாதிருப்பின், அவர் கல்வி நிறைவுற்றதாகக் கொள்ளப்படாது. கட்டழகெல்லாம் இளமைக் காலத்தில்தான் இன்புறுத்திக் குறை மறைக்கும். இடைமையிலும் முதுமையிலும் இன்புறுத்துவது அறுசுவையுண்டியே. 'தாய்க்குப்பின் தாரம்' என்பது பழமொழி. 'அறுசுவையுண்டி அமர்ந்தில்லாளூட்ட' என்பது நாலடியார் (1). வள்ளுவர் தபுதார நிலையிற் பாடிய கையறம்,

"அடிசிற் கினியாளே அன்புடையாளே"

என்று தொடங்குகின்றது.

மனைக்கிழத்தியார் அரச அல்லது பெருஞ் செல்வக் குடியைச் சேர்ந்தவராயிருந்து, சமையற்கு ஒரு மடைநூல் வல்லானை அமர்த்திக் கொண்டாலும், அன்றும் அவர்க்கு அக்கலை தெரிந்திருப்பது நன்றேயாம். மாலைக்காலத்திலும் களைப்புநேரத்திலும் மனைவியின் மிடற்றிசை அல்லது கருவி இசை கணவற்கு இன்பூட்டும்.

இனி, மணமக்கள் இருவரும் தாய்மொழியில் ஒத்திருப்பதும் கல்விப் பொருத்தத்தின் பாற்படும். மொழியே கல்வி வாயிலாதலின், இருவர் மொழியும் வேறுபட்டிருப்பின், ஒருவர் மொழியை ஒருவர் விரைந்து கற்றுக்கொள்ளல் வேண்டும்.

ix. முறைப் பொருத்தம்

மணமக்கள் உறவினராயின், மணமுறையினராயிருத்தல் வேண்டும். முறையல் மணத்தினால் (Incest) நன்மகப் பேறுண் டாவதில்லை. குடிக்கும் இழுக்காம்.

இனி, அக்கையார் மகளை மணத்தல் முறைமணமாயினும், நெருங்கிய வுறவாயிருத்தலால் அதுவும் விலக்கற்பாலதே. கணவன் மனைவியரின் அரத்த உறவு நெருங்க நெருங்க உடல் நொய்மையும் மதி மழுக்கமும், அகல அகல உடலுரமும் மதி விளக்கமும், அவர்தம் மக்கட்கு அமையும் என்பதை அறிதல்வேண்டும்.

x. வினைத்திறப் பொருத்தம்

மணமக்கள் இருவரும் சூழ்ச்சி வலிமையிலும் சுறுசுறுப்பிலும் ஒத்திருப்பது, வினைத்திறப் பொருத்தமாம். அவருள் ஒருவர் விரைமதியும் தாளாண்மையுமுடையவராயிருக்க, இன்னொருவர் மந்த மதியும் சோம்பலுமுடையவராயிருப்பின் அவர்தம் இல்லற வாழ்க்கை ஒற்றுமையும் இன்பமும் உடையதாயிராது.

xi. தொழிற் பொருத்தம்

மணமக்கள் இருவரும் ஒரே தொழிலை அல்லது தொடர்புள்ள தொழில்களைச் செய்தல், தொழிற் பொருத்தமாம். தொழில் வேறுபடினும் மாறுபடல் கூடாது.

xii. குடும்பநிலைப் பொருத்தம்

'ஊரில் ஒருவனே தோழன், ஆருமற்றதே தாரம்' என்பதாலும், மணமகள் செல்வ மிக்கவளாயின் மணமகனுக்கு நன்றேயாதலாலும், செல்வப் பொருத்தம் சிறப்பாய்க் கவனித்தற்குரிய தொன்றன்றாம். ஆயினும், இளவரசனும் கூலிக்காரியும்போல், அல்லது கூலிக்காரனும் இளவரசியும்போல், மணமக்கள் செல்வநிலை அளவிறந்து வேறுபடின், அவர் ஒருவருக்கொருவர் வாழ்க்கைத்துணையாய் இணைத்து வைக்கப்படற்குரியவராகார். குடும்ப நிலையைப் பிறப்பு என்று கூறினும் ஒக்கும்.

இங்ஙனம் பன்னிரு பொருத்தமும் பாராது செய்து வைக்கப்படும் அல்லது செய்யப்படும் மணங்கள்,

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்". (792)

என்னுங் குறட் கிலக்கான நட்புப்போல், துன்பந் தருவனவேயாம்.

"பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோ(டு)
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருஎன
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே".

என்பது, தொல்காப்பியம் (மெய்ப்பாட்டியல், 25) கூறும் பதின் பொருத்தமாகும்.

இதன் பொருள்:- ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த பருவமும், ஒத்த உருவநிலையும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும், எனத் தலைமகனும் தலைமகளும் (காதலனும் காதலியும்) ஒத்திருக்கும் பகுதிகள் பத்து வகைய என்றவாறு.

இவற்றுள், நிறையும் அருளும் ஒழுக்கத்துள் அடங்கும்.

"ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே".

என்று தொல்காப்பியக் களவியல் (2) கூறுவதால், பெரும்பாலும் மணமக்கள் பலவகையிலும் ஒத்திருக்க வேண்டுமென்பதும், அவ் ஒப்புமையே நீடித்த இன்பவாழ்க்கைக்கு ஏதுவானதென்பதும், பெறப்படும்.

**(3) குலவெறி கொள்ளாமை**

தமிழரைப் பிரித்துக் கெடுத்தற்கென்றே, பிறப்பொடு தொடர் புற்ற குலப்பிரிவினை அயலாராற் புகுத்தப்பட்டதென்றும், அது நாலுத்தி பட்டறிவுகட்கு முற்றும் முரணானதென்றும் உலக முழுமையினும் இந்நாவலந் தேயத்திலேயே அது உள்ளதென்றும், திருவள்ளுவர் திருமூலர் முதலிய பெரியோரெல்லாராலும் கண்டிக்கப் பட்டதென்றும், உணராத தமிழர், இன்னும் குலவுணர்ச்சியிலேயே திளைத்து வருகின்றனர். இதனால், ஒவ்வொரு குலத்தாரும் தமக் குள்ளேயே மணந்து, தமிழினத்தில் பேரறிவுச் சுடர்கள் பெருவாரியாய்ப்

பிறவாதபடி தடுத்துவிடுகின்றனர். அதோடு தமிழர்க்குள் ஒற்றுமையும் இல்லாது போகின்றது.

**"ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு – இங்கு**
**ஒற்றுமை யின்றேல் அனைவர்க்குந் தாழ்வு".**

இதைத்தமிழ் மாகாண முன்னேற்றம்பற்றியாவது கவனித்தல் வேண்டும்.

நீண்டகாலமாகத் தொடர்ந்துவரும் குலமுறையைத் திடுமென்று நீக்குவது இயலாதேனும், உயர்த்தப்பட்டோர்க்கும் தாழ்த்தப்பட்டோர்க்கும் இதுபோது துப்புரவு பற்றி ஏற்றத்தாழ்வு உள்ளதேனும், வேளாளரும் முதலியாரும் போல்வாரும், மறவரும் இடையரும் போல்வாரும், இரட்டியாரும் நாயுடுவும் போல்வரும், தம்முள் மணந்துகொள்ளலாமே!

தமிழரின் பல்வேறு பெருங்குலங்களன்றி, (நாடும் ஊருமாகிய) இடம், உண்பொருள், உடை, சிறு தெய்வம், கொள்கை, சடங்கு, செய்பொருள், சிறப்புநிகழ்ச்சி, குணம், நிறம், குடுமிநிலை, வழக்கம், அணி, தாலிவகை, மொழி, அலுவல், பட்டம், குலவரிசை, சின்னம், மக்கள் தொகை, தொகுப்பு, கலப்பு, தோற்றக்கதை, திறமை, முறைப்பெயர் முதலிய பற்பல வகைபற்றிப் பிரிந்துகிடக்கும் நூற்றுக் கணக்கான பொருந்தாக் குலப்பிரிவுகளிற் பலவும், அகமண வகுப்புக்களாகவே யிருந்துவருவது, தமிழன் முன்னேற்றத்திற்கு மாபெருந்தடையாதலின், கல்விகற்ற தமிழ இளைஞர் குருட்டுத்தனமும் குறுகிய நோக்குமுள்ள குலமுதியர் சொற் கொள்ளாது, அதை விரைந்து தகர்த்தெறியக்கடவர்.

**(4) பரிசம் வாங்காமை**

பெண்ணிற்குப் பரிசம் கேட்பது ஓரளவு விலை கூறுவது போன்றிருத்தலால், செல்வப் பெற்றோர் அதனைக் கேளாதிருத்தல் சிறப்பாம். ஏழைப்பெற்றோராயின், மணச்செலவு நோக்கி ஒரு தொகை கேட்பது குற்றமாகாது.

இனி, பெண்ணிற்குக் கேட்பதற்குப் பதிலாக மணவாளப் பிள்ளைக்குக் கேட்பது, இயற்கைக்கு மாறானதாயும், எக்காரணத்

தாலும் சரிமைப்படுத்த முடியாததாயும் இருக்கின்றது. இவ்வுலகத்தில் ஒருவன் பெறக்கூடிய பேரின்பப் பேறு பெண்ணே. அகத்தழகும் புறத்தழகும் ஒருங்கேயமைந்த அருமைப் பெண்ணிருக்கவும் அவளை விட்டுவிட்டு, காசிற்காசைப்பட்டு அழகிலியை மணப்பது, இல்லற இன்பத்தையும் வாழ்க்கை வசதியையும் பணத்திற்கு விற்பது போன்றதே.

**(5) நாளும் வேளையும் பாராமை**

'நான் செய்வது நல்லோர் செய்யார்', என்பது நம் முன்னோரின் கொள்கையேயாயினும், அறிவியல் (விஞ்ஞானம்) வளர்ச்சியடைந்துள்ள இக்காலத்திற்கு அது ஏற்காது.

இடம் என்பது எங்ஙனம் எங்கும் பரந்து தன்னளவில் வேறுபாடற்றதோ, அங்ஙனமே காலம் என்பதும் என்றும் பரந்து தன்னளவில் வேறுபாடற்றதாம். பகலிரவும் அவற்றால் நாளும் வேளையும் ஏற்படுவதற்குக் காரணம், கதிரவன் தோற்றமறைவு அல்லது ஞாலத்தின் (பூமியின்) சுழற்சியே. இறைவன்,

**"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**
**இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்**
**சிறிய வாகப் பெரியோன்".**

(திருவாசகம், திருவண்டப்பகுதி, 1-6)

ஆதலின், நாளுங்கோளும் அவன் ஆணைக்கடங்கியே நடக்கும். 'அவனன்றி அணுவும் அசையாது'. நாளுங்கோளுமே நல்லது செய்யும் என்று நம்புவார், கடவுளை நம்பாதவரும், அவரது

**"எட்டுத்திசையும் பதினாறுகோணமும் எங்குமொன்றாய்**
**முட்டித்ததும்பி முளைத்தெழு சோதி" த்தன்மை**

அறியாதவருமே யாவர்.

திருஞான சம்பந்தர் மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோட்கிணங்கிச் சமணரை யொழிக்க மதுரை சென்ற போது, 'இன்று நாளுங்கோளும் நன்றாயில்லாமையால் தாங்கள் மதுரை செல்ல வேண்டாம்'. என்று திருநாவுக்கரசர் தடுக்க, அவர்,

"வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள்கங்கை முடிமேலணிந்தென் உளமே புகுந்தவதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழம் வெள்ளிசனி பாம்பிரண் டுமுடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்லநல்ல அடியாரவர்க்கு மிகவே.

"என்பொடு கொம்பொடாமை இவைமார்பிலங்க எருதேறியேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடிவந்தென் உளமே புகுந்த வதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறுமுடனாய நாள்கள் அவைதான்
அன்பொடு நல்லநல்ல அவைநல்லநல்ல அடியாரவர்க்கு மிகவே".

என்று பாடிச்சென்று முழு வெற்றி கண்டார். இந்நிலைமை சம்பந்தர்போலும் பெரியார்க்குமட்டுமன்று, உண்மையன்புள்ள எல்லார்க்கும் உரித்தாம்.

"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே". (புறம். 124)

என்று, என்று செல்லினுந்தப்பாத மலையமான் திருமுடிக்காரியின் வள்ளன்மையைப் புகழ்ந்துள்ளார் கபிலர்.

நாள்கோள்களின் இயக்கத்தால் மழையும் மழையின்மையும் போல நன்மை தீமை விளைவது உண்மையாயினும், அவ்விளைவை அவ் இயக்கத்திற்குக் காரணமான எல்லாம் வல்ல இறைவன் ஏற்பாடாகக் கொள்வதல்லது, ஞாலம் போல் உயிரற்ற அஃறிணை யிடப் பொருள்களாய நாள்கோள்களின் செயலாகக்கொள்வது எங்ஙனம் பொருந்தும்? தமிழ் நாட்டுக் கீழைக்கரைப் புயற்சேதத்தால் துன்புற்ற மக்கட்கு சென்னை மாகாண முதலமைச்சர் மதிதகு காமராச நாடார் புகைவண்டி வாயிலாய் நடைப்பரிகாரம் அனுப்பினாரெனின், அம்முதலமைச்சர்க்கு நன்றி கூறுவதல்லது அப்புகைவண்டிக்கு நன்றி கூறுவது பொருந்துமோ?

ஒவ்வொரு நன் முயற்சிக்கும் மங்கலவினைக்கும், நாளுங் கிழமையும் ஓரையும் வேளையும் பார்த்துப் பார்த்து என்றும் அச்சத் தோடேயே வாழ்வதால், இந்தியர் சராசரி வாழ்நாள் குறைந்தும்;

அவற்றைப்பாராத மேனாட்டார் வாழ்நாள் கூடியும் உள்ளன. இவ்வுண்மையைக் கீழ்வரும் சராசரி வாழ்நாட் பட்டியிற் காண்க.

| நாடு | கணக்கெடுத்த ஆண்டு | ஆண் (ஆண்டு) | பெண் (ஆண்டு) |
|---|---|---|---|
| 1. ஆலந்து (Holland) | 1931-35 | 65.1 | 66.4 |
| 2. ஆத்திரியா (Austria) | 1932-34 | 63.48 | 67.14 |
| 3. நார்வே | 1921-31 | 60.98 | 63.84 |
| 4. அமெரிக்கா | 1937 | 60.75 | 65.08 |
| 5. இங்கிலாந்து | 1937 | 60.18 | 64.40 |
| 6. செருமனி | 1932-34 | 59.86 | 62.81 |
| 7. சுவிட்சர்லாந்து | 1920-32 | 59.25 | 63.05 |
| 8. பிரான்சு | 1928-33 | 54.30 | 59.02 |
| 9. இத்தாலி | 1930-32 | 53.76 | 56.00 |
| 10. இரசியா | 1926-27 | 41.93 | 48.79 |
| 11. சீனா | 1929-31 | 34.85 | 34.63 |
| 12. இந்தியா | 1931 | 26.91 | 26.56 |

நாளும் வேளையும் பார்ப்பவர் வாழ்நாள் கூடியும், பாராதார் வாழ்நாள் குறைந்தும், இருப்பதிற்குப் பதிலாக, அவை நேர்மாறாயிருப்பது கவனிக்கத்தக்கது. இந்தியர் வாழ்நாட் குறைவிற்கு வறுமையும் வெப்பமிகையும் பெருங்காரணமேனும், நன்னாள் வினை செய்கையால் சிறிதும் அதற்கு ஈடு செய்யப்படாமையை நோக்குக.

'நாள் செய்வது நல்லார் செய்யார்'. என்பது உண்மையாயின், நல்ல நாளில் மணப்பவரெல்லாம் நீண்ட வாழ்வினராயும், தீய நாளில் மணப்பவரெல்லாம் குறுகிய வாழ்வினராயும், இருத்தல்வேண்டும். அங்ஙனமின்மை வெளிப்படை.

மேலும், ஒரு பெருவினை நன்னாளிலும் நல்வேளையிலும் தொடங்கப்பெறினும், தீயநாளிலும் தீயவேளையிலும் தொடர்ந்து செய்யப்படுவதையும் கவனிக்க.

திருவருள், பெற்றோர் உடற்கட்டு, நல்லுணவு, உடற்பயிற்சி, அகமலர்ச்சி, கவலையின்மை, சினமின்மை, நல்லொழுக்கம், அறிவுடைமை, வரம்புகடவாமை முதலியவற்றாலேயே மக்கள் வாழ்நாள் நீடிக்கும் என்பதை அறிதல் வேண்டும்.

சித்திரை வைகாசி ஆனி தை பங்குனி ஆகிய ஐம்மாதங்களே திருமணத்திற்குரியனவாகக் கொள்ளப்படுதலின், இடையில் நிகழக்கூடிய பல திருமணங்கள் நின்றுவிடுகின்றன; அல்லது வீணாக நிறுத்திவைக்கப்படுகின்றன.

மணவுறுதி செய்யப்பட்ட பின்பும் குறித்த கிழமையிலும் வேளையிலும் வராமையால் மணமகளையிழந்த மணமகனும், மணமகனையிழந்த மணமகளும், உளர்.

ஆகவே, உடல்நலத்தையும் வினைவசதியையும் தாக்கும் கோடை மாரிபோன்ற கால வேறுபாடும், பகல் இரவு போன்ற வேளை வேறுபாடும் அல்லது, வேறுவகையிற் காலப்பகுதிகளைக் கணித்து வீணாக இடர்ப்படுவதை விட்டுவிடல்வேண்டும்.

நகரங்களில் நடைபெறும் திருமணங்கட்கு வருவார் பலர் அலுவலாளராயிருப்பாராதலால், அவர் வசதி நோக்கி, பொது விடுமுறையல்லாத நாட்களில் நடத்தும் திருமணங்களையெல்லாம், காலை 8 மணிக்கு முன்னாவது மாலை 4 மணிக்குப் பின்னாவது வைத்துக்கொள்வது நலம்.

**(6) பிறப்பியம் பாராமை**

இனி, மணமக்களின் பிறப்பியத்தை (ஜாதகத்தை) நோக்குவதும் தவறாம். மனப்பொருத்தமே மணப்பொருத்தம். அஃதன்றிக் கணிய முறையில் வெவ்வேறு பொருத்தம் பார்ப்பதால், பொருந்தும் மணங்கள் விலக்கவும் பொருந்தா மணங்கள் பொருத்தவும் படுகின்றன. பிறப்பியக் கணிப்புப்படி பெரும்பால் நிலைமைகள் நேர்வதில்லை. ஏதேனும் நேரினும் அது தற்செயலாக நேர்வதே. பிறப்பியத் தவற்றைக் கணிப்புத் தவறென்று கூறுவதும் பொருந்தாது. சரியாய்க் கணிப்பவர் எவருமிலர். "ஐந்திற்கிரண்டு பழுதில்லாதிருக்கும்". என்பதே எக்கணியர் கூற்றும். அவ்விரண்டுதான் எவையென்பதும் அவர் அறியார்.

பிறப்பியத்திற் குறிக்கப்பட்ட, வாழ்நாள் நீட்சியை நம்பி, நோய் மருத்துவம் செய்யாதும் உடலைப் பேணாதும் இறந்துபோனவரும்; ஆக்கநிலையை நம்பி, முயற்சி செய்யாது வினைதோற்றாரும், முற்காப்பின்றி ஏற்கெனவே இருக்கும் நிலைமையுமிழந்தோரும்; எண்ணிறந்தோராவர்.

ஒரே நாளிலும் ஒரே வேளையிலும் பிறப்பவரெல்லாரும் ஒரே நிலைமை யடைவதின்மையால், தன் முயற்சியையும் இறைவ னருளையும் பிறர் துணையையுமே நம்பி வாழ்தல்வேண்டும். இதனால் கணியர் பிழைப்புக் கெடாதவாறு, அவரை உடுநிலையங்களிலும் (Observatory) வானாராய்ச்சி நிலையங்களிலும் அமர்த்திக்கொள்வது, அரசியலார்க்குத்தகும்.

**(7) மணம்பற்றிய செய்திகளைத் திட்டமாய் முடிவு செய்துகொள்ளுதல்**

பரிசம், நகை, செலவு, நடைமுறை முதலியனபற்றி, மணமகன் வீட்டாரும் மணமகள் வீட்டாரும் முன்னமே பேசித் திட்டமான முடிவுசெய்துகொள்ளல்வேண்டும். அல்லாக்கால், கரணவேளையிலோ, மணவிருந்திலோ கலாம் விளைந்து, திருமணம் நின்றுவிடவோ இன்பங்கெடவோ நேர்ந்துவிடுகின்றது. 'பந்தல் நட்டினாற் பகை' என்பது பழமொழி.

**(8) தாய்மொழியிற் கரணம் செய்வித்தல்**

தேவமொழியென ஒன்றின்மையாலும், தமிழ் வடமொழிக்கு முந்தியதும் ஆரிய மொழிகட்கு மூலமும் ஆனதினாலும், ஆரியக் கரணம் தமிழனுக்கு மானக்கேட்டை விளைப்பதனாலும், பிராமணர் தென்னாடு வருமுன் எல்லாத் தமிழர் மணங்களும் தமிழிலேயே நடைபெற்று வந்ததினாலும் ஒவ்வொரு தமிழனும் தமிழிலேயே கரணம் செய்வித்தல்வேண்டும். பிராமணன் தமிழன்பனாகித் தமிழிற் கரணம் செய்ய இசையின் அதை ஏற்றுக்கொள்ளலாம். தமிழிற் கரணம் செய்வியாதவன் தமிழனாகான்.

ஒவ்வொரு தூய தமிழனும், தன் வீட்டுக் கரணத்தை மட்டுமன்றிப் பிறர்வீட்டுக் கரணத்தையும் தமிழிற் செய்விக்க முயற்சி செய்தல் வேண்டும். வடமொழியில் நடக்கும் கரணத்திற்குச் செல்லுதல் கூடாது.

**(9) வீண்சடங்கு விலக்கல்**

முற்கூறிய வீண் சடங்குகளோடு, முன்னோர் காலத்தில் நிகழ்ந்த உடன்போக்கு, மகட்பாற்காஞ்சிப் போர், மணப் போட்டிப்போர் முதலியவற்றைக் குறிக்கும் நினைவு கூர் சடங்குகளையும், விலக்கல் வேண்டும்.

**(10) செல்வநிலைக்கேற்பச் செலவு செய்தல்**

திருமணத்தில் தாராளமாய்ச் செலவு செய்தல் தக்கதே. ஆயின், அவரவர் செல்வநிலைக்கேற்பச் செலவு செய்தல் வேண்டும். 'புலியைப்பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்டதுபோல்' செல்வனைப்பார்த்து ஏழையும் செலவழித்துப் பின்பு கடனால் வருந்துவது நன்றன்று. 'கலியாணம் செய்த வீட்டில் ஆறுமாதம் கருப்பு' என்பது பழமொழி. சிலர் திருமணச் செலவால் காலமெல்லாம் கருப்புண்டாக்கிக் கொள்வதுமுண்டு. செல்வன் எவ்வளவு செல வழித்தாலும் அது குணமேயன்றிக் குற்றமன்று. அதனாற் பல தொழிலாளர்க்குப் பிழைப்பு நடக்கும். செலவு செய்தல் வழியாகவே செல்வன் செல்வம் நாட்டிற் பரவ முடியும்.

திருமணவிழா பல நிகழ்ச்சிகளைக் கொண்டதினால், திட்ட மிட்டுச் செலவு செய்யினும் அதற்குமேற் போய்விடும். இதனாலேயே, 'கலியாணம் பண்ணிப்பார், வீட்டைக் கட்டிப்பார்' என்பர். செலவு எவ்வளவு மேற்படினும் செல்வன் ஏற்றுக்கொள்ள முடியும்; ஏழைக்கு முடியாது. ஆகையால் மிக விழிப்பாயிருந்து சிக்கனமாய்ச் செலவு செய்தல்வேண்டும். அங்ஙனமாயின், ஏழைக்கும் 'அரைக்காசிலே கலியாணம், அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை' நடக்க முடியும். செலவு செய்யப் பணமில்லாவிடத்துச் செலவை நிறுத்த வேண்டுமே யொழியத் திருமணத்தை நிறுத்தி வைத்தல் கூடாது.

ஆயின், சில கஞ்சர் செல்வநிலையிருந்தும், 'ஐயாசாமிக்குக் கலியாணம், அவரவர் வீட்டில் சாப்பாடு, கொட்டு முழக்குக் கோயிலிலே, வெற்றிலைபாக்குக் கடையிலே' என்றவாறு, திருமண வீட்டிற்கு வந்தவர்க்கும் வெற்றிலை பாக்குக்கூடக் கொடுப்பதில்லை. இது மிகக்கொடிது. மணமக்கள் நீடித்து நல்வாழ்வு வாழ்தற்கு, எல்லார் நல்லெண்ணமும் வேண்டியதாகும். மணமக்களைப் பிறர் வாழ்த்தும் வாழ்த்திற்கு, மண வீட்டிற் கொடுக்கப்பெறும் எதுவும் ஈடாகாது. சிலர் வெற்றிலை கொடாமை குலமரபென்று போக்குக் காட்டுவர். அஃதுண்மையாயின், அத்தீய வழக்கத்தை உடனே மாற்றிக்கொள்ளல் வேண்டும். இறைவன் திருவருள் போன்றே மக்கள் நல்லெண்ணமும் ஒருவர் நல்வாழ்விற்கு வேண்டியதாம்.

**(11) மணநாளன்றே மணமக்களைக் கூட்டுதல்**

சில பெற்றோர், மணத்தின் நோக்கத்தையே உணராது நீண்ட காலமாக இன்பந்துய்த்து வெறுத்த தங்களைப் போன்றே இள மணமக்களையுங் கருதிக்கொள்கின்றனர். களவொழுக்க இன்பம் வாய்க்காத மணமக்கட்கெல்லாம் மணநாளின்டமே சிறந்தது என்பதை அறிதல்வேண்டும். மேலும், மணநாளிற் கூடாமையால், ஒழுக்கக்கேடு, ஐயுறவு, மதியாமை, அன்பின்மை, நீடுகூடி வாழாமை முதலியன இருசாரும் ஏற்படுதற்கிடமாம்.

**(12) மணமக்களின் நல்வாழ்வை விரும்பல்**

சில பெற்றோர் தம் மகன் மருமகளோடும் மகள் மருமகனோடும் கூடிக் குலவுவதையும், ஒருயிரும் ஈருடலுமாக ஒன்றியிருப்பதையும் விரும்புவதில்லை. சிறப்பாக, மகள் அங்ஙனம் இருப்பின் அழுக்காறு கொண்டு, 'நீண்ட காலம் பழகிய நம்மை மறந்துவிட்டு நேற்று வந்தவனொடு கூடிக் கொண்டாள் பார்' என்று சொல்வதுண்டு. அன்னவர் கீழ்வரும் கலித்தொகைச் செய்யுட் பகுதியைக் கருத்தூன்றிக் கவனிப்பாராக.

1 "பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
2 சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
3 ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே".

(பாலைக்கலி)

இது, உடன்போக்கில் தலைவியைத் தேடிச்சென்ற செவிலித் தாயை நோக்கி அறிஞர் கூறியது.

(1. உறு-பொருந்தும், சாந்தம்-சந்தனம், படுப்பவர்-பூசுபவர், அனையளே-அப்படிப்பட்டவளே.

2. கெழு-பொருந்திய, முத்தம்-பெரிய முத்து, தேருங்கால்-ஆராயுமிடத்து.

3. புணர்-பொருந்திய, இன்னிசை-இனிய ஒலி, முரல்பவர்-வாசிப்பவர், யாழ்-வீணை, சூழுங்கால்-ஆராயுமிடத்து).

### 3. மணமக்கள் கவனிக்கவேண்டியவை

மணமகன், மணமகளைத் தனக்குச் சமமான வாழ்க்கைத் துணையாகக் கருதல்வேண்டும்; கரணவேளை தவிர மற்ற நேரத்தில் ஆசிரியனும் பெரியோரும்போன்ற குரவரைக்கண்டால், உடனே எழுந்து வணக்கஞ் செய்தல் வேண்டும்;தான் அரச நிலையில் இருப்பதாகக் கருதிக் கொண்டு,நவாபு ஓலக்கம் (தர்பார்) நடாத்துதல் கூடாது. மணப்பந்தியில் தானும் சேர்ந்து பரிமாறலாம், மணமகளொடு கலந்து பேசலாம்.

மணமகள் கரணவேளையிலும் மணமேடையிலும் பிடரி வலிக்கத் தலை கவிழ்ந்தேயிருத்தல் வேண்டுமென்பதில்லை. மற்ற வேளையிலும், பேசாமடந்தையாயிருத்தல் கூடாது. மற்றப் பெண்டிருடன் கலந்துரையாடலாம்; அவர்க்கு வேண்டுவன கொடுத்துதவலாம்; மணமகனுடன் பேசலாம்.

மணமக்கள், மணவிழாவின்பின் கணவனும் மனைவியுமாய்ச் செய்யவேண்டிய கருமங்களும் கடமைகளும், என் 'மண வாழ்க்கை' என்னும் நூலில் விரிவாய்க் கூறப்பெறும்.

### 4. உற்றார் உறவினர் கவனிக்கவேண்டியவை

உறவினரும் நண்பரும், மணமக்கள் ஏழையராயும் திருப்பிச் செய்ய இயலாதவராயும் இருந்தால்தான் அவர்க்குப் பரிசும் நன் கொடையும் வழங்கல்வேண்டும்; செல்வராயிருப்பின் தேவையில்லை; பெருஞ் செல்வராயிருப்பின் வழங்கவே கூடாது. அவர்க்கு வழங்குவது பொருளியல் நூலுக்கு மாறான பெருங் குற்றம்.

உறவினர் மொய் வைக்கும்போது, மணவீட்டார் தமக்கு முன்பு செய்த அளவே செய்யவேண்டும் என்று கருதவேண்டுவதில்லை. தம் செல்வ நிலைக்கேற்பக் கூட்டியோ குறைத்தோ செய்யலாம்;

அல்லாக்கால் அது வட்டியில்லாக் கடன்போலிருந்து தன் சிறப்பை யிழக்கும். மணவீட்டாரும் உறவினர் நிலையறிந்து பெருந்தன்மையாய் இருந்துகொள்ளவேண்டும்.

உறவினர் அயலூரிலிருந்து ஒரு மணவீட்டிற்கு வந்திருப்பின், கரணம் முடிந்தபின், எத்துணை விரைந்து திரும்ப முடியுமோ அத்துணை விரைந்து திரும்பிவிடவேண்டும்; 'என்று செல்வாரோ!' என்று மணவீ[illegible]ர் ஏங்கிக் கலங்குமாறு [illegible]ன்னாள் தங்கிவிடுதல் கூ[illegible]து

சீர் செய்தல், வரிசை வைத்தல், மொய்யெழுதுதல், பரிசளித்தல், நன்கொடை வழங்கல், முதலியவை கைம்மாறு கருதிச் செய்யப்படும்போது, அவற்றின் ஏற்றத்தாழ்வு இழிதகவாய்ச் சொல்லிக் காட்டப்படுதலாலும், அதனால் கண்ணன்ன கேளிர்க்கும் மனக்கசப்புண்டாவதாலும், கைம்மாறு கருதாவகையில் அவற்றை அன்பளிப்பாக வைத்துக்கொள்வதே சாலச் சிறந்ததாம்.

### 5. அரசியலார் கவனிக்கவேண்டியவை

ஓர் உடம்பு நலமாயிருத்தல்வேண்டின், அதன் உறுப்புக்களெல்லாம் நலமாயும் ஒன்றுபட்டுமிருத்தல் வேண்டுவதுபோல; ஒரு நாடு முன்னேற வேண்டுமாயின், அதன் மக்கள் வகுப்பாரெல்லாம் முன்னேறியும் ஒன்றுபட்டுமிருத்தல் வேண்டும். தமிழ்நாட்டில் இத்தகைய முன்னேற்றத்திற்குக் குலப்பிரிவினை பெருந் தடையா யிருத்தலின், அரசியலார் அதை அறவே ஒழித்தற்கான செயல்களை உடனடியாய் மேற்கொள்ளவேண்டும். அவை,

(1) கலப்புமணஞ் செய்வார்க்கு, மணச்செலவு முழுவதையு மேனும் அதில் ஒரு பகுதியையேனும் ஏற்றுக் கொள்ளுதலும்,

(2) அவர்க்கு மண முடிந்தவுடன் அவர் தகுதிக்கேற்ப அரசியல் அலுவலளித்தலும்,

(3) அவர் பெறும் மக்கட்குப் படிப்புதவி செய்தலும் ஆகும்.

கலப்புமணமும், மணமகளை நோக்கி, (1) உயர் கலப்புமணம், (2) ஒத்த கலப்புமணம், (3) தாழ் கலப்புமணம், என முத்திறப்படும். ஒரு மறவன், ஒரு வேளாளப் பெண்ணை மணப்பது உயர் கலப்புமணம்;

ஓர் இடைப்பெண்ணை மணப்பது ஒத்த கலப்புமணம்; ஒரு தாழ்த்தப்பட்ட குலப்பெண்ணை மணப்பது தாழ் கலப்புமணம். இம்மூன்றும் கலப்புவகையில் முறையே கடையிடை தலையாம். ஆதலால், அவற்றின் தரத்திக்கேற்பப் பாராட்டுதவியுமிருத்தல் வேண்டும்.

ஒட்டுமரங்கள் உயர்ந்த கனிகளைத் தரல்போல் கலப்பு மணமக்கள் அறிவாற்றலிற் சிறந்த மக்களைப் பெறுவாராதலால், நாட்டு முன்னேற்றத்திற்கேற்ற நன் மக்கட்பேற்றை விளைப்பது, அரசியலார் மேற்கொள்ளவேண்டிய கடமையாகும்.

### 6. புதியன புகுதல்

மணமக்களை முன்னமே பழகச் செய்தல், அச்சிட்ட அழைப்பிதழ் விடுத்தல், பொதுக் கட்டடத்தில் மணம் நடத்தல், மணமக்கள் எளிய உடையுடுத்தல், கரணநடப்பைக் கரண ஆசிரியர் (புரோகிதன்) பொறுப்பில் குத்தகையாக விட்டுவிடல், மணவறையின்மை, சொற்பொழிவாற்றுவித்தல், பையில் தேங்காய்பழவெற்றிலை கொடுத்தல், பரிசேற்காமை, ஊர்வலமின்மை, கட்டுச்சோற்றுத் திருமணம், இருமணக் கூட்டுச் செலவு, தொகுதிமணம், பதிவுமணம் முதலியன இக்காலத்துப் போற்றத்தக்க புதிய வழக்கங்களாம்.

### 7. போலிச் சீர்திருத்த மணங்கள்

சிலர் குலம்பார்த்தே மணந்துகொண்டும், பெண்வீட்டில் முன்னமே பிராமணப் புரோகிதனைக் கொண்டு வடமொழிக் கரணம் செய்வித்துவிட்டு, பின்பு மணமகன்வீட்டில் தமிழ்க்கரணம் நடத்திக் கொண்டும் முழுத்த (முகூர்த்த) நாளில் முழுத்த வேளையிலேயே தாலி கட்டிக்கொண்டும், முன்னமே தாலி கட்டிவிட்டுப் பின்பு மோதிரம் அணிவித்துக்கொண்டும், குத்துவிளக்கிற்குப் பதிலாக மின்சார விளக்குப் போட்டுக்கொண்டும், மணத்திற்கென்று மதம் மாறிக் கொண்டும், தம் மணங்களைச் சீர்திருத்த மணங்களென்று கூறிக்கொள்கின்றனர். கடவுள் வழிபாட்டை நீக்கித் தமிழில் நடத்திய அளவிலேயே சீர்திருத்த மணம் ஆகிவிடாது. மணமகள் வீட்டார் சீர்திருத்த மணத்திற்கு இசையாமையாலோ, மணமகன் வீட்டார்க்கு அதில் முழுநம்பிக்கை இல்லாமையாலோ, வடமொழிக்கரணம்

முன்னமே நடந்துவிடுகின்றது. அதோடு நிறுத்திக்கொள்வது நல்லது. அங்ஙனமின்றித் தமிழ்க்கரணமும் செய்து மக்களை ஏமாற்றுவது, திருந்தா மணத்தினுந் தீய செயலாகும். வடமொழியின்றித் தமிழ்க்கரணம் மட்டும் நடப்பின் அதை ஓரளவு சீர்திருத்தம் என்னலாம்.

## 8. பெண்டிர் சமன்மை (சமத்துவம்)

தமிழர் நாகரிகமும் பண்பாடும் அடைந்து பல்லாயிரம் ஆண்டுகளாகியும், இன்னும் பெண்டிர் சமன்மை ஏற்படாதது பெரிதும் இரங்கத்தக்கதே. தமிழரிடைப் பெண் காப்பு மறமில்லை யென்று அண்மையில் வடநாட்டாரொருவர் பழித்ததும் அமைவுடையதே.

இருபாலுள்ளும் ஆண்பாலே ஏற்றமானது என்னும் கொள்கை இன்னும் இருந்துவருகின்றது. 'சாண் பிள்ளை ஆண்பிள்ளை மாண்பிள்ளை' என்று ஆடவரே தம்மைப் புகழ்ந்துகொள்வது அழகன்று. மணவுறவுபற்றி நடக்கும் சண்டைகளில், நெஞ்சு புண்பட வசையேற்பவர் பெண்வீட்டாரே. 'பெண்ணைப் பெற்றவன் பேச்சுக் கேட்பான்' என்பது பழமொழியாகும்.

மணமகன் எத்துணை மணஞ்செய்திருப்பினும், மறுமணத்தில் புது மணவாளப்பிள்ளையாகவே மதிக்கப்படுகின்றான்; மணமகளோ முதல் மணத்திலேயே தன் கன்னித் தன்மையை இழந்தவளாகக் கருதப்படுகின்றாள்.

"தோள்நல முண்டு துறக்கப் பட்டோர்
வேள்நீ ருண்ட குடையோ ரன்னர்;
"நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர்
அல்குநர் போகிய வூரோ ரன்னர்;
"கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்
சூடின ரிட்ட பூவோ ரன்னர்".

(பாலைக்கலி, 22)

---

* நலம்-அழகு. துறக்கப்பட்டோர்-கைவிடப்பட்டோர். வேள்- தாகத்தால் விரும்பிய. குடை-பனையோலைப்பட்டை

நல்குநர்-அன்புசெய்யுங்காதலர். புரிந்து-விரும்பி. அல்குநர்- குடியிருப்போர்.

என்று ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு பாடப்பட்ட நிலைமை இன்றுமுள்ளதெனின், என் சொல்வது? பெண்டிர் நுகர்ச்சிப்பொருள் நிலைமையினின்று வாழ்க்கைத்துணை நிலைமைக்கு இன்னும் முற்றும் உயர்த்தப்படவில்லை என்பதே இதனால் அறியப்படும் உண்மையாம்.

இனி, பெண்டிரின் உறுப்பியல் பற்றியும், மச்சமறுப்பற்றியும், பிறப்பு வரிசை பற்றியும், நல்லவுந் தீயவுமாக எத்துணையோ சொலவடைகளும் பழமொழிகளும் உள. அத்தகைய விதப்பீடுகள் ஆடவரைப்பற்றி மிகுதியாயில்லை. இருப்பனவும் பெரும்பாலும் நல்லவையே.

இவ்வாறு பெண்பாலைப்பற்றி நிற்கும் இழிவெல்லாம், மண மகளின் சமன்மைக்குத் தடையாயிருத்தலின், அவற்றைத் திருத்திக் கொள்வது தமிழர் கடன். ஆயின், பெண்ணின் பெண்மைபற்றியும் மென்மைபற்றியும் கற்புக்காவலாக ஏற்பட்டுள்ள எல்லாக் கட்டுப் பாடுகளும், பெண்ணலத்திற்கேயாதலின், அவை என்றும் இருந்தே தீரல்வேண்டும். கணவனாரும் மனைவியாரும் ஒருவரோடொருவர் உரையாடும் போது, கணவனார் ஒருமையிலும் மனைவியார் உயர்வுப் பன்மையிலும் பேசினாலும், படர்க்கையில் இருவரும் மதிப்பாகவே பேசுதல் வேண்டும். கூலிவேலை செய்யும் கல்லா மக்களாயின், இருவரும் ஒருமையிற் பேசிக்கொள்ளலாம்.

மனைவியார் கணவனாரின் பெயரைக் குறிப்பிடும்போது மதிப்பொடு குறிப்பிடின் குற்றமாகாது.

மங்கலம் எங்கணுந் தங்குக!

## பின்னிணைப்பு

**1. திருமண அழைப்பிதழ்**
**போலிகை (மாதிரி) 1**

திருச்சிற்றம்பலம்

# திருமண அழைப்பு

"குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானும் உடனே காண்க"

அன்புடையீர்,

எல்லாம்வல்ல இறைவன் திருவருளால், நிகழும் 1131-ஆம் ஆண்டு வைகாசி மாதம் 29-ஆம் நாள் (11.6.1956) திங்கட்கிழமை புனர்பூசநாள் காலை 9 மணிக்குமேல் 10 மணிக்குள், கடக நற்பொழுதில்,

| | |
|---|---|
| திருவாளர் ஆ.இராசகோபால் பிள்ளை அவர்கள் திருமகன் திருவளர் செல்வன் அறிவியல் இளைஞன் (B.Sc.) **கலியாணசுந்தரம்** என்னும் மணவழகனுக்கும் | திருவாளர் சுப்பையாப் பிள்ளை அவர்கள் திருமகள் திருவளர் செல்வி **வடிவழகியம்மைக்கும்** |

சென்னைப் பவழக்காரத்தெரு, 6-ஆம் எண் திருவரங்க நிலையத்தில் நடைபெறும் திருமணத்திற்கும், அதைச்சார்ந்த நிகழ்ச்சிகளுக்கும், தாங்கள் உற்றார் உறவினருடன் வந்திருந்து மணமக்களை வாழ்த்தும்படி வேண்டிக்கொள்கிறோம்.

அன்புள்ள,

**ஆ.இராசகோபால் பிள்ளை,**
ராலீசு இந்தியா மட்டிட்டது (Ltd.),
சென்னை.

**வ.சுப்பையாப் பிள்ளை,**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழக ஆட்சியாளர்.

**போலிகை 2**

## திருமண அழைப்பிதழ்

*ஐயன்மீர், அம்மைமீர்,*

இறைவன் திருவருளை முன்னிட்டு, நிகழும் வள்ளுவராண்டு 1987 தைமீ 21-ஆம் நாள் (3-2-1956) வெள்ளிக்கிழமை காலை 71/2 மணிக்குமேல் 83/4 மணிக்குள், மகர ஓரையில்,

| | |
|---|---|
| என் இளைய மகன்<br>நீடுவாழி<br>**சீராளனுக்கும்** | கண்ணமங்கலம் பண்ணையார்<br>திருமான் கழறிற்றறிவார்<br>அவர்களின் மகள் நிறைசெல்வி<br>**கயற்கண்ணிக்கும்** |

பெரியோரால் உறுதி செய்யப்பட்டபடி, இவ்வூர்ப் பொய்யா மொழியார் தெருவில், 23 என்னும் எண்ணுள்ள என் இல்லத்தில், மதுரைத் தியாகராயர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், பண்டாரகர் (Dr) மா.அரசமாணிக்கனார் (எம்.ஏ., எல். தி., எம். ஓ. எல்., பிஎயிச்டி.,) அவர்களைக் கரண ஆசிரியராகக் கொண்டு திருமணம் நிகழவிருப்பதால், தாங்கள் சுற்றஞ்சூழ முற்பட வந்திருந்து திருமணத்தைச் சிறப்பிப்பதுடன் மணமக்களையும் வாழ்த்தி யருளுமாறு, வேண்டிக்கொள்கின்றேன்.

முதுகுன்றம் (விருத்தாசலம்),
19-1-1956

இங்ஙனம்,
**மகரநெடுங்குழைக்காதன்.**

போலிகை 3

## திருமண அழைப்பிதழ்

ஐயன்மீர், ஐயைமீர்,

நிகழும் வள்ளுவராண்டு 1987 பங்குனிமீ 8-ஆம் நாள் (21-3-1956) அறிவன் (புதன்) கிழமை காலை 8 மணிக்கு,

| என் தங்கை<br>செல்வி<br>**குயின்மொழியாளுக்கும்** | சென்னைப்பச்சையப்பன் கல்லூரிக்<br>கணித விரிவுரையாளர் செல்வர்<br>**கண்டறிவாருக்கும்** |
|---|---|

இவ்வூர் ஆளவந்தார் தெருவில் 19 என்னும் எண்ணுள்ள வீட்டில், திருச்சித் 'தமிழர்நாடு' ஆசிரியர், திருவாளர் கி.ஆ.பெ.உலகநாயகம் (விசுவநாதம்) அவர்கள் நடத்தி வைக்கும் திருமணத்திற்கு, தாங்கள் உற்றார் உறவினருடன் வந்திருந்து, அப்புது வாழ்க்கையரை வாழ்த்தியருளுமாறு பன்முறை வேண்டுகின்றேன்.

அன்பன்,

திருவரங்கம்,
11-3-56.

**சீர்திருத்தநம்பி**

போலிகை 4

## வாழ்க்கை ஒப்பந்த அழைப்பிதழ்

பேரன்பரீர்,

நிகழும் வள்ளுவராண்டு 1987 வைகாசிமாதம் 18-ஆம் நாள் (31-5-56) வியாழக்கிழமை காலை 8-15 மணிக்குமேல் 9 மணிக்குள்,

---

வினைதீர்த்தான் கோயில் (வைத்தீசுவரன் கோயில்)

'தமிழன்' ஆசிரியர் தோழர்

**இளஞ்செழியனுக்கும்,**

மயிலாடுதுறை (மாயவரம்)த் தோழியர்

**தாமரைக்கண்ணிக்கும்**

---

மயிலாடுதுறைத் 'தமிழர் முன்னேற்றக் கழக' புலுவலகத்தில், அறிஞர் அண்ணாத்துரை தலைமையில் சீர்திருத்தத் திருமணம் நடைபெறும். அவ்வமயம், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் தோழர் அன்பழகனார் (எம்.ஏ). 'தமிழர் திருமணம்' என்னும் பொருள் பற்றிப் பேசுவார்.

தாங்கள் தமருடன் வந்திருந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகின்றேன்.

தோழன்,

**நெடுஞ்செழியன்.**

போலிகை 5

## வாழ்க்கை ஒப்பந்த அழைப்பிதழ்

அன்பரீர்,

நிகழும் வள்ளுவர் ஆண்டு 1987 வைகாசித்திங்கள் 30-ஆம் நாள் (12-6-'56) செவ்வாய்க்கிழமை காலை 8 மணிக்கு, நானும் மறைக்காட்டுப் (வேதாரணியம்) 'பெரியார்' துவக்கப்பள்ளி ஆசிரியை பூம்பாவையும், சேலம் அறிவுடைநம்பி தெருவில் 'பகுத்தறிவு நிலையத்தில்', ஈ.வெ.ரா. பெரியார் தலைமையில் செய்துகொள்ளும் வாழ்க்கை ஒப்பந்தத்திற்கு, தாங்கள் தமருடன் வந்திருந்து எங்களை வாழ்த்தியருளுமாறு தாழ்மையாய் வேண்டிக்கொள்கின்றோம்.

திருமணத்தின்போது, சேலங் கல்லூரி, வரலாற்றுத்துறைத் தலைவர் திரு.சொக்கப்பா அவர்கள் (எம்.ஏ., எல்.தி.), 'திருமணச் சீர்திருத்தம்' என்னும் பொருள்பற்றிப் பேசுவார்கள்.

சேலம்,<br>12.2.'56.

மதியழகன்<br>பூம்பாவை

போலிகை 6

# திருமண அழைப்பிதழ்

| மணமகன்: | மணமகள்: |
|---|---|
| (R) துரையாண்டான் (துரைசாமி) | (V) கலைமகள் (சரசுவதி) |
| சேலம் ஈரோடு மின்சாரப் பாதீட்டுக்குழும்பு, மட்டிப்பட்டது. | திருவீரப்பப்பிள்ளை மகள் |

அன்புடையீர்,

நிகழும் வள்ளுவராண்டு 1987 வைகாசித் திங்கள் 29-ஆம் நாள் (11-6-1956) திங்கட்கிழமை காலை 9 மணிக்கு மேல் 10 மணிக்குள், சேலம் கிச்சிப்பாளையம் அரங்கநாதம் பிள்ளை தெரு, 41-ஆம் எண் இல்லத்தில் நடக்கும் எங்கள் திருமணத்திற்கு, தாங்கள் தங்கள் சுற்றத்தாருடன் வருகை தந்து மன்றலைச் சிறப்பிக்கப் பணிவுடன் வேண்டுகின்றோம்.

தங்கள் அன்புள்ள,

சேலம்,
7-6-1956

துரையாண்டான்
கலைமகள்

போலிகை 7

தமிழ் வாழ்க! தமிழ்க்கொடி வெல்க!

## மன்றல் அழைப்பு மடல்

அன்பர்காள்,

நிகழும் வள்ளுவராண்டு 1987 நேர்வான் (சித்திரை) மாதம் 20-ஆம் நாள் (2-5-'56) அறிவன் (புதன்) கிழமை காலை 8 மணிக்கு,

| | |
|---|---|
| வேலூர் மிதிவண்டிச் செப்பனீட்டாளர் திருவாளர் **வடிவேலனார்க்கும்** | குடியேற்றம் (குடியாத்தம்) மருத்துவச்சியார் திருவாட்டியார் **வள்ளியம்மையார்க்கும்** |

வேலூர் மணமண்டபத்தில் 'கீழை உயிரீட்டு வைப்புறுதி' (Oriental Life Insurance) முகவர் (Agent) திருவாளர் அண்ணல்தங்கோ நடத்திவைக்கும் தமிழ்த்திருமணத்திற்கு, தாங்கள் தவறாது குடும்பத்துடன் வந்திருந்து, மணமக்களை வாழ்த்தியருளப் பெரிதும் வேண்டுகின்றேன்.

வேலூர்,
25-4-'56

தமிழ்த் தொண்டன்,
**நக்கீரன்.**

## 2. திருமண நிகழ்ச்சி நிரல்

(1) கடவுள் வணக்கம்
(2) கரணம்
(3) சொற்பொழிவு
(4) வாழ்த்திதழ் படித்தல்
(5) பாகடைப் பகிர்வு (தாம்பூலம் கொடுத்தல்)
(6) பரிசளிப்பு
(7) நன்றி கூறல்

(பாகு=பாக்கு. அடை=இலை, வெற்றிலை. பாகு + அடை = பாகடை)

## 3. திருமணத் தமிழ்க் கரணம்

தமிழ்ப்புலவர், ஆசிரியர், தமிழப்பார்ப்பார், குலத்தலைவர், அறிஞர், முதியோர் முதலியவருள் ஒருவரான கரண ஆசிரியர் அல்லது திருமண ஆசிரியர், திருமணப் பந்தலில் அல்லது கொட்டகையில் உள்ள மணவறையிலாயினும் மணமேடையிலாயினும், திருமண மண்டபத்தில் அல்லது கட்டிடத்தில் ஒரு கோடியிலாயினும், மணமக்களை ஓர் அறுகாலியில் (Bench) அல்லது இணையிருக்கை மெத்தை நாற்காலியில் நெருங்கியிருக்கச் செய்து, திருமண அவையோரை நோக்கி நின்று,

பெருமானரே! பெருமாட்டியரே!<br>
(அல்லது)<br>
பெரியோரே! தாய்மாரே!<br>
(அல்லது)<br>
உடன்பிறப்பாளரே! உடன்பிறப்பாட்டியரே!

என விளித்து,

இன்று..........................என்னும் மணமகனுக்கும், ............. ........என்னும் மணமகளுக்கும், இறைவன் திருமுன்பும் இங்குள்ள பெரியோர் முன்னிலையிலும், (இங்குள்ள பெரியோர் முன்னிலையில்) திருமணக் கரணம் நிகழவிருக்கின்றது. அனைவரும் அமைதியாயிருக்கக் கேட்டுக் கொள்கின்றேன்; என்று அவையமர்த்தி,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு".

என்னும் முதற் குறளையேனும்,

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே"

என்னும் கம்பவிராமாயணக் கடவுள் வணக்கச் செய்யுளையேனும்,

"உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்".

என்னும் பெரியபுராணக் கடவுள் வணக்கச் செய்யுளையேனும்,

தூங்க இல்லறத் துணைமையை நாடியே
இங்க மர்ந்துள இம்மண மக்களை
மங்க லம்மிகு மணவினைப் படுத்தவே
எங்குந் தங்கிய இறையடி பணிகுவாம்.

என்னும் திருமண இறைவணக்கச் செய்யுளையேனும், பத்தியுணர்ச்சியுடன் ஓதி, பின்வருமாறு கரணம் நடத்திவைத்தல் வேண்டும்.

கடவுள் நம்பிக்கையில்லாவிடத்தில் கடவுள் வணக்கத்தை விட்டுவிடலாம்.

கரண ஆசிரியர் (மணமகனை நோக்கி) - நீ (நீர்)______ என்னும் இவளை (இவரை) உன் (உம்) வாழ்க்கைத் துணையாகக் கொள்ள இசைகின்றாயா? (இசைகின்றீரா?)

மணமகன் - இசைகின்றேன்.

க.ஆ. (மணமகளை நோக்கி) - நீ (நீர்)_____என்னும் இவனை (இவரை) உன் (உம்) வாழ்க்கைத் துணையாகக்கொள்ள இசைகின்றாயா? (இசைகின்றீரா?)

மணமகள் - இசைகின்றேன்.

க.ஆ. (மணமகன் குரவரை நோக்கி) - உங்கள் மகன் (மகனார்).. ...என்பவன் (என்பவர்) ... ... ... என்னும் இந்நங்கையை (நங்கையாரை) வாழ்க்கைத் துணையாகக்கொள்வது, உங்கட்கு இசைவுதானா?

மணமகன் குரவர் - இசைவுதான்.

க.ஆ. (மணமகள் குரவரை நோக்கி) உங்கள் மகள் (மகளார்).... .......என்பவள் (என்பவர்).............என்னும் இந் நம்பியை (நம்பியாரை) வாழ்க்கைத் துணையாகக் கொள்வது, உங்கட்கு இசைவுதானா?

க.ஆ.(மணமகன் தன் வலக்கையால் மணமகள் வலக்கையைப் பிடிக்கச் செய்து, பின்வரும் உறுதிமொழியைத் தாம் தொடர் தொடராகச் சொல்லி, மணமகனைச் சொல்வித்து, அது முடிந்தபின், மணமகளையும் அவ்வாறே சொல்வித்தல்வேண்டும்).

மணமகன்:..............ஆகிய நான்,..................ஆகிய உன்னை, இன்று என் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டு, என் உயிர் உடல் பொருள் மூன்றையும் உனக்கே ஒப்புவித்து, என் வாழ்நாள் முழுதும், உன் காதற் கணவனாயிருப்பேனென்று, இறைவன் திருமுன்பும், இங்குள்ள பெரியோர் முன்னிலையிலும் (இங்குள்ள பெரியோர் முன்னிலையில்) உறுதி கூறுகின்றேன்.

மணமகள்:____ஆகிய நான்____ஆகிய உம்மை, இன்று என் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டு, என் உயிர் உடல் பொருள் மூன்றையும், உமக்கே ஒப்புவித்து, என் வாழ்நாள் முழுதும், உம் காதல் மனைவியாயிருப்பேனென்று, இறைவன் திருமுன்பும், இங்குள்ள பெரியோர் முன்னிலையிலும் (இங்குள்ள பெரியோர் முன்னிலையில்) உறுதி கூறுகின்றேன்.

க.ஆ.(உறுதி கூறல் முடிந்தவுடன், மணமகன் மணமகள் கழுத்தில் மங்கல நாணைக் கட்டச் செய்து, அல்லது மணமகள் மோதிரவிரலில் மோதிரத்தைச் செறிக்கச் செய்து,

இருவரையும் மாலை மாற்றுவிக்கவேண்டும். அதன்பின், மணமக்கள் இருவரையும், பின்வருமாறு வாழ்த்த வேண்டும்).

மணமக்களாகிய நீங்கள் இருவீரும், ஓருயிரும் ஈருடலுமாக ஒன்றி, பகுத்தறிவு பாங்கிருக்க, தன்மானந்தழைத்தோங்க, குன்றாச் செல்வமுங் குறையா நலமுங்கொண்டு, உற்றோர் மகிழவும் மற்றோர் புகழவும் (எல்லாம் வல்ல இறைவன் அருளால்) நிலவுலகில் நீடூழி வாழ்ந்திருக்க.

(குரவர் - தந்தை, தாய், தமையன், தமக்கை, காப்பாளர், பெரியோர் ஆகியவருள் ஒருவர்).

## 4. கரணத்தொடர்பான சில சீர்திருத்தக் கருத்துக்கள்

### (1) பிள்ளையார் வணக்கம்

பிள்ளையார் வணக்கம் கடைச்சங்கக் காலத்திற்குப் பின்புதான் தமிழகத்திற் புகுந்தது. இறைவன் ஓங்கார வடிவினன் என்று சொல்லப்பட்டதினாலும், ஓங்காரத்தின் வரிவடிவம் யானைவடிவை ஒத்திருப்பதாலும், யானை வடிவில் ஒரு தெய்வம் ஆரியப் பூசாரியரால் புதிதாய்ப் படைக்கப்பட்டு, சிவநெறியை முன்னினும் மிகுதியாய் ஆரியப்படுத்தவும், சேயோன் என்னும் முருகனுக்குச் செய்யும் வழிபாட்டையும் அவனுக்குத் தந்தையாகச் சொல்லப்பட்ட சிவனுக்குச் செய்யும் வழிபாட்டையும் குறைக்கவும், தமிழருக்குள் மற்றுமொரு மதப் பிரிவையுண்டுபண்ணவும், புகுத்தப்பட்டதாக அறிஞர் கருதுகின்றனர். சிவன் அல்லது திருமால் என்னும் பெயரால் எல்லாம் வல்ல இறைவன் ஆகிய முழுமுதற் கடவுளே வணங்கப் படுதலின், அவனை வணங்குவார்க்கு, அவனுக்கு மகன் அல்லது மருகன் முறைப்பட்ட வேறொரு சிறு தெய்வம் வேண்டியதேயில்லை. மேலும், இறைவன் படைப்பில் தலைசிறந்த மாந்தன் வடிவில் இறைவனை வணங்குவதே பகுத்தறிவுள்ள மக்கட்கு இழுக்காயிருக்க, ஓர் அஃறிணையுயிரியின் வடிவில் எத்தெய்வத்தையும் வணங்குவது, இவ் இருபதாம் நூற்றாண்டு உயர்திணையாளனுக்கு எள்ளளவும் பொருந்தாதென்பது சொல்லாமலே பெறப்படும்.

சிவ நெறியும் மால்நெறியும் தமிழ மதம் என்பதும், கணபதி வணக்கமான காணபத்தியம் பிற்கால ஆரியச் சேர்க்கை என்பதும், என் 'தமிழர் மதம்' என்னும் நூலில் விரிவாகக் கூறப்பெறும்.

**(2) விளக்குவைத்தல்**

நாகரிகம் முற்றாத பண்டைக்காலத்தில், ஐம்பூதங்களுள் ஒன்றான தீ இறைவன் அடையாளமாகக் கருதப்பட்டது. அதனால், மணவறையில் குத்துவிளக்கைக் கொளுத்தி வைத்தனர். அறிவு மிக்க இக்காலத்திற்கு அக்கருத்து ஏற்காது. அதனால், தாலித்தட்டிற் சூடங் கொளுத்தவும் வேண்டியதில்லை.

**(3) அறுகிடல்**

சிறுபிள்ளை நிலையிலிருந்த முதுபண்டைமக்கள் மணமக்களை வாழ்த்தியபோது, அவர் குடும்பம் அறுகுபோல் வேரூன்றி உணவுத் தட்டில்லாமல் வாழவேண்டுமென்று குறித்தற்கு, அறுகும் அரிசியும் கலந்து அவர்மீது தூவினர். இன்று அப்பொருள்களின்றியே அக்குறிப்பொடு வாழ்த்த முடியுமாதலின், அவற்றைத் தூவவேண்டிய தில்லை. வீணாக வாரியிறைக்கும் அரிசியை இரப்போர்க்கும் ஏழைமக்கட்கும் அளிப்பின், எத்துணையோ அறப்பயனுண்டாம்.

இங்கு அரிசிக்குக் கூறியது, மணவறையில் வைக்கப்படும் ஏனை மங்கலப் பொருள்கட்கும் ஒக்கும்.

## 5. திருமண வாழ்த்திதழ்

**போலிகை 1**

இறைவன் வகுத்த இயற்கை நெறிப்படி, இல்லறமென்னும் நல்லறம் புகுந்த நண்பர்காள்,

நீங்கள் இன்றே உண்மையான உலக வாழ்க்கை தொடங்கி, நீங்காத வாழ்க்கைக் கூட்டாளியராயினீர். ஓருயிரும் ஈருடலுமாக ஒன்றிய காதலராய், இன்பத்திலும் துன்பத்திலும் வாழ்விலும் தாழ்விலும் ஒரு நிலைப்பட்ட உள்ளத்தினராய்,

> "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது".

என வள்ளுவர் வகுத்த வாழ்க்கையினராய், அறிவுடை மக்களை அளவாகப்பெற்று, அளவில் காலம் இன்புற்று வாழ்ந்திருப்பீராக.

## போலிகை 2

மாண்புமிக்க மனையறம் புக்க மணமக்காள்,

நீங்களிருவீரும், அன்றிலைப்போல அகலாதிருந்து, இன்பினுக் கெல்லை இம்மையிற்கண்டு, பல்வகைச்செல்வமும் பாங்காயுதவ, வளவனும் வாழ்வரசியுமாய், காவிரி மணலினுங் கழிபலநாள் வாழ்ந்திருக்க.

உங்கள் மரபு, வாழையடி வாழையாய் வழிவழி சிறக்க.

## போலிகை 3

மன்றல் வாழ்த்து மடல்

இல்லறம் என்னும் இணைவாழ்க்கையேற்ற துணைவர்காள்,

நீங்கள் இருவீரும், காதல் என்னும் பூங்காவில் இன்பம் என்னும் தேனை நுகரும் வண்டுகள். இல்லறம் என்னும் சகடத்தை உலக வாழ்க்கை என்னும் கரட்டுப்பாதையில் இழுத்துச் செல்லும் இளங் காளைகள். ஞாலம் (பூமி) என்னும் பண்ணையில் மக்கள் என்னும் பயிரை வளர்க்கும் உழவர்கள்.

பசியும் பிணியும் பாரில் நீங்கவும், மக்கள் யாவரும் மக்களாய் வாழவும், உங்கள் வாழ்க்கை பயன்படுவதாக.

பால் புளித்தாலும் பகல் இருண்டாலும், உலகம் பெயர்ந்தாலும் உயர்ந்தோர் பிழை செய்தாலும், நீங்கள் நிலை பிறழாது நீடூழி வாழ்ந்திருக்க.

## போலிகை 4

திருமண வாழ்த்துப் பா

(நேரிசையாசிரியம்)

மங்கலந் தங்கும் மனையறம் மருவும்
..........................................
ஒருயி ரெனவே ஒன்றிய காதலிற்
பல்வகைச் செல்வமும் பாங்கா யுதவ

இம்மையின் இன்பத் தெல்லை கண்டே
ஏனையர்க் கெல்லாம் இயல்வரை யுதவி
உற்றோர் மகிழவும் மற்றோர் புகழவும்
வள்ளுவன் நெறியும் தெள்ளிய தமிழும்
மாநிலம் எங்கணும் பரவ
வாழியர் நன்கு வையகம் நெடிதே.

## 6. தாலிகட்டும் வழக்கம் தமிழரதே

ஒரு காதலன் தன் காதலிக்கு, அல்லது ஒரு மணமகன் தன் மணமகளுக்கு, அல்லது கணவன் தன் மனைவிக்கு, கழுத்தில் தாலி கட்டுவதன் வாயிலாய், அவளைத் தன் வாழ்க்கைத்துணைவி என்று பிறர்க்குக் காட்டுவது, தமிழகத்துத் தொன்றுதொட்ட வழக்கமா யிருந்து வருகின்றது.

கட்டுதல் என்னும் சொல் மணத்தல் என்று பொருள்படுவது, தாலிகட்டும் வழக்கம் பற்றியே. ஓர் இளையானை அல்லது இளையாளை நோக்கி, ‘நீ யாரைக் கட்டப்போகிறாய்?’ என்று கேட்பது உலக வழக்கு. மணமக்கள் இருவருள்ளும் தாலி கட்டுவது மணமகனும் அவனால் கட்டப்படுவது மணமகளுமாயிருப்பினும், கட்டுதல் என்னும் சொல் மணத்தல் என்னும் பொருளில் வழங்கத் தலைப்பட்டபின், அது இருவர்க்கும் பொதுவான சொல்லாயிற்று.

முதற்காலத்தில், மக்கள் குடும்பப்பிரிவின்றிக் குலங்குலமாய் அல்லது தொகுதி தொகுதியாய் வாழ்ந்துவந்த நிலையில், ஒரு குலத்துப் பெண்டிர், பெரும்பாலும் குலத்தலைவன் மனைவியர் நீங்கலாக, அக்குலத்து ஆடவர் அனைவர்க்கும் பொது மனைவியராகவே இருந்து வந்தனர். பின்பு நாகரிகந் தோன்றித் தனிமனைவியர் ஏற்பட்டபின், ஒருவன் தன் மனைவியை அல்லது மனைவியரை வேறாகப் பிரித்து வைத்தற்கு, தாலிகட்டும் வழக்கம் ஏற்பட்டது. ‘ஈகையரிய இழையணி மகளிர்’ என்பது (புறம் 127), தமிழப்பெண்டிர் தாலியணியும் வழக்கத்தைக் குறிக்கும் சங்கநூற் சான்றாம்.

முந்துகாலத்தில், சிறப்பாகக் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்து வந்தபோது, இலையையும் பூவையும் ஆடையணியாக அணிவது தமிழர் வழக்கம். நால்வகையிலையுள்ளும் ஓலையென்பது உறுதியான

தாதலின், பனங்குருத்தால் காதணி கழுத்தணி முதலிய பல்வேறு அணிகளை அவர் செய்து கொண்டனர். சேரன் பனம் பூமாலையை அடையாள மாலையாகக் கொண்டிருந்ததினாலும், ஓலையைக் குறிக்கும் தோடு என்னும் சொல் இன்றும் காதணிப்பெயராய் வழங்குதலாலும், காதில் ஓலையணிவதால் ஓலைப்பள்ளி யென்று பெயர் பெற்ற ஒரு பள்ளி வகுப்பார் இன்றிருத்தலாலும், தாழ்த்தப் பட்ட சில குலத்துப் பெண்டிர் ஓலையையே காதில் அணிவதாலும், பழங்காலத்தில் ஓலையணிகளைக் காதிலும் கழுத்திலும் தமிழப் பெண்டிர் அணிந்தனர் என்பதில், எள்ளளவும் வியப்பிற்கிடமின்றாம். காதிற்போன்றே கழுத்திலும் பனங்குருத்தணி அணியப்பட்டமை.

"தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு"

என்னும் நாலாயிரத் தெய்வப் பனுவலடியால் (திவ். பெரியாழ். 2, 6, 1) தெரியவரும்.

தாலத்தின் ஓலையினாற் செய்யப்பட்டதினாலோ, தால் போல் தொங்குவதினாலோ, பெண்டிரின் திருமணக் கழுத்தணி தாலியெனப் பெயர் பெற்றிருக்கலாம். தாலம்-பனை. தால்-நாவு. இனி, நாலி (தொங்குவது) என்பது தாலி எனத் திரிந்தது எனலுமாம்.

மக்கள் நாகரிகமடைந்து பொன்னால் அணி செய்யத் தொடங்கியபின், தாலியும் பொன்னாற் செய்யப்பெற்றது.

"பொற்றாலி யோடெவையும் போம்"

என்றார் ஔவையார்.

சிலர் பொற்றாலியில் மணியும் பதித்துக்கொண்டனர்.

"நாணுள்ளிட்டுச் சுடர்வீசு நன்மாணிக்க நகுதாலி
பேணி நல்லார் கழுத்தணிந்து"

என்பது சிந்தாமணி (2697).

"பன்மணிப்பூணுஞ் சின்மணித் தாலியும்"

என்பது பெருங்கதை (19:119).

பண்டைக் காலத்தில் கழுத்திலணியப்படும் அணிகளெல்லாம் தாலியெனப்பட்டமை, அச்சுத்தாலி முளைத்தாலி புலிப்பற்றாலி

ஐம்படைத்தாலி முதலிய பெயர்களால் அறியப்படும். அச்சுத்தாலி என்பது காசுமாலை. முளைத்தாலியென்பது சிறுமியர் கழுத்திலணியப் பெறும் சிறுமணிமாலை. புலிப்பற்றாலி யென்பது குறிஞ்சி நிலச் சிறார் கழுத்திலும் பெண்டிர் கழுத்திலும் அணியப்பெறும் புலிப்பல் மாலை. ஐம்படைத்தாலி என்பது திருமாலின் ஐம்படையாகிய சங்கு சக்கர வில் வாள் தண்டவடிவிற் செய்யப்பட்டு, சிறுவர் கழுத்தில் பாதுகாப்பாக அணியப்பெறுவது. ஐம்படைத்தாலி, 77-ஆம் புறப்பாட்டில் தாலியென்றே சொல்லப்பட்டது.

இனி, குதிரையின் கழுத்தில் அணியப்பெற்ற தாலியென்னும் அணியும் உண்டு.

> "வலியுடை யுரத்தின் வான்பொற் றாலி"

என்று பெருங்கதை கூறுதல் காண்க (18:13). சில வெள்ளாட்டின் கழுத்தில் தொங்கும் சதையும், ஒப்புமைபற்றித் தாலியெனப்படும்.

> "கயிற்கடை யொழுகிய காமர் தூமணி
> செயத்தகு கோவை"

என்னும் சிலப்பதிகாரத் தொடரில் (6:101-2), கோவை என்பதற்குப் 'பின்றாலி' யென்று அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் உரைத்திருப்பதால், அக்காலத்து முன்றாலி பின்றாலியென இருவகை யணி யிருந்தமையும் பெறப்படும். முன்றாலி மார்பில் தொங்குவது; பின்றாலி முதுகில் தொங்குவது. இவற்றால், தாலி என ஒரு தனியணி முற்காலத்திருந்தமையும், பின்பு எழுந்த அதன் வேறுபாடுகள் அவற்றிற்கேற்ப வெவ்வேறு அடையடுத்துக் கூறப்பட்டமையும், பெறப்படும்.

தாலி என ஒரு குறிப்பிட்ட மங்கல அணி பிற்காலத்துத் தோன்றியபின், அது ஒவ்வொரு குலத்திற்கும் ஒன்றாக வெவ்வேறு வடிவிலும் அளவிலும் செய்யப்பட்டு அததற்கேற்பப் பெயரும் பெற்றது. ஆமைத்தாலி, பொட்டுத்தாலி, சிறுதாலி, பெருந்தாலி என்பன சில பெயர்கள்.

தாலிபோன்றே தாலிக்கொடியும் மங்கலமாகக் கருதப்பட்டு, மங்கலநாண் எனப்பெற்றது. அது முதற்கண் மஞ்சள் தோய்த்த

நூற்கயிறாயிருந்ததினால், சில குலத்தார் இன்னும் அதன் பழநிலையை மரபாகப் போற்றிக்காப்பர். சில குலத்தார் அதைப் பொற்கொடியாகச் செய்துகொள்வர். இனி, மங்கல நாணையே தாலியாகக் கொண்டாரும் உண்டு.

தாலியையும், தனியாக அணிவதும் வேறு சில உருக்களுடன் சேர்த்து அணிவதுமாக, இருவேறு மரபுகள் எழுந்துள்ளன தாலியையே அணியாத முது பண்டை நிலையில், இன்றும் பல அநாகரிகத் திரவிட மரபினர் உளர். கொங்கு நாட்டு வேளாளப் பெண்டிர் கனத்த தாலியை அணிவதால், சிறப்பு நாட்களில் அதை அணிவதும் பிறநாட்களிற் கழற்றி வைத்திருப்பதும் அவர் வழக்கம்.

தாலிகட்டுவது ஆரியர் வழக்கமன்றென்பது, பின்வரும் (P.T.) சீநிவாச ஐயங்கார் கூற்றால் அறியப்படும்.

"திருமணச்சடங்குகளில், தலைமையானதாகத் தாலியணிவதும், மஞ்சள் தோய்த்த நாணைக் கழுத்திற் கட்டுவதும், போன்ற சில அனாரிய வழக்கங்கள், தெற்கத்துப் பிராமணப்பெண்டிர்க்கு அருமையாக உள்ளன"-'தமிழர் வரலாறு' (History of the Tamils) பக்.57.

"இது (தாலியணிவது) கிருகிய சூத்திரங்களிலேயே சொல்லப் படாத ஒரு தூய தமிழ வழக்கம். கையைப்பிடிக்கும் பாணிக் கிரகணத்தையும் ஏழடியிடும் சப்த பதியையுமே, திருமணச்சடங்கின் உயிர்நாடிப் பகுதிகளாகக் கிருகிய சூத்திரங்கள் கொள்கின்றன". மேற்படி, அடிக்குறிப்பு.

பாணிக்கிரகணம் என்பது எங்ஙனம் ஆரியர்க்கு முதன்மை யானதோ, அங்ஙனமே தாலிகட்டு என்பதும் தமிழர்க்கு முதன்மை யானதென்க.

"மணமகன் தாலியை எடுத்து, 'பெண்ணே! அறப்பயன் பெறுவதற்குத் தாலி கட்டுகின்றேன்' என்று சொல்லி, மணமகள் கழுத்தில் ஒரு கயிற்றாற் கட்டுகின்றான். இக்கூற்று வேதமந்திரமன்று. மணச்சடங்கின் இப்பகுதியும் கிருகிய சூத்திரங்களிற் சொல்லப்பட வில்லை".- 'தென்னாட்டுக் குலமரபு' (Castes and Tribes of Southern India), பக்.285.

கழுத்திலணியும் தாலியினும் கையிலணியும் மோதிரமே கண்ணியமும் நாகரிகமும் வாய்ந்ததெனின், கொத்துக் கொத்தாய்ப் பொற்றொடரியும், மொத்த மொத்தமாய்ப் பன்மணிமாலையும் கழுத்திலணியும்போது, தாலிக்கேன் இடமில்லையென எதிர் வினவி விடுக்க.

குறிப்பு:-தமிழரெல்லாரும் ஓரினமாயினும், பழக்க வழக்கங் களில் வேறுபட்ட பல்வேறு தமிழக் குலங்கள் தொன்றுதொட்டு இருந்து வருவதாலும், கடைக்கழகக் காலத்திலேயே சில தமிழக் குலங்கள் சில ஆரிய வழக்கங்களை மேற்கொண்டுவிட்டதனாலும், இதுபோதுள்ள ஓரிரு சான்றுகளைமட்டுங் கொண்டு, கழகக்காலத்தில் தாலி ஒரு குலத்தார்க்கும் மங்கலவணியாகவில்லை என்று முழு வுறுதியாய்க் கூறிவிட முடியாது. ஆயின், அது முதற்காலத்தில் அழகு அல்லது காப்புப் பற்றிய பொதுவணியாகவே தோன்றிற்று என்பதும், அது தமிழர் அணியே என்பதும் தெள்ளத் தெளிவாம்.

### 7. மலையாள நாட்டு மணமுறை

பண்டைச் சேரநாடாகிய மலையாள நாட்டில், ஆரியத் தொடர்பால், மணமுறையில் மிகுந்த மாறுதல்கள் நேர்ந்துள்ளன. சேரநாட்டில் முதன்முதற் குடிபுகுந்த பிராமண வகுப்பாரான நம்பூதிரிமார் தம்மை நிலத்தேவர் (பூசுரர்) என நாட்டி மதத் துறையில் அளவிறந்த தெய்விகச் செல்வாக்குப் பெற்றதுடன், ஆங்காங்கு பெரு நிலக்கிழாரும் குறுநில மன்னருமாய் ஆட்சித்துறையிலும் மிகுந்த அதிகாரத்தைக் கைப்பற்றி, குலவியல் வரிசையில் தம்மைத் தலையாகச் செய்து, சேரநாட்டுப் பழந்தமிழ்க் குடிகளுட் சிறந்த நாயர்குலப் பெண்டிரை, தம் விருப்பம்போல் பொறுப்பற்ற முறையில் நுகர்தற் கேற்ற மணமுறைகளை வகுத்துவிட்டனர்.

நம்பூதிரிப் பிராமணர்க்குள் பல மக்களிருப்பின் தலைச்சனுக்கே அல்லது மூத்தவனுக்கே சொத்துரிமையும் மணவுரிமையுமாதலால், அவனுக்கிளையவரெல்லாம் நாயத்திமாரையே வைப்பு முறையில் மனைவியராக ஆண்டுவந்தனர். ஆயின், அவர்க்குப் பிறக்கும் பிள்ளைகட்குத் தந்தையின் சொத்துரிமை யில்லாததால் மருமக் கட்டாயம் (அம்மான் சொத்துரிமை) நாயர் குலத்தில் ஏற்படுத்தப்

பட்டது. பிராமணர் எந்தச் சமையத்திலும் எந்த நாயத்தியையும் நுகருமாறு பல்கணவமும் ஏற்படுக்கப்பட்டது. நாயத்திமார் நாயரையும் பிராமணரையும் மட்டும் மணக்கலாமென்றும், அவருள் பிராமணரை மணப்பது தெய்வத்தை மணப்பது போன்ற பெரும்பேறு என்றும், அதனால் குலம் உயருமென்றும், கருத்துக்கள் எழுந்தன. பிராமணர், நாயத்திமாரொடு காமநுகர்ச்சியன்றி வேறெவ்வகை உறவுங்கொள்ளாது, அவரைத் தம் இல்லத்திலும் சேர்க்காது, தாம் வேறாகவே வாழ்ந்து வந்தனர். அவருக்கு நாயத்திமாரிடம் பிறக்கும் பிள்ளைகளும், தம் தந்தையரை அறியாது தம் தாயாருடன் தரை என்றும் தரைவாடு என்றும் சொல்லப்படும் நாயர் குடியிருப்புக்களில் நாயர் குலத்தினராக வளர்ந்து வந்தனர்.

மணவாது கன்னியாய் இறப்பவள் தீக்கதியடைவாள் என்றொரு மூட நம்பிக்கை நம்பூதிரியராற் புகுத்தப்பட்டு விட்டதினால், முதலாவது நாயர் குலத்திலும் பின்பு அதனினுந் தாழ்ந்த வேறு சில குலங்களிலும், தாலிகட்டு என்னும் பகடிக்கூத்தான இளமை மணம் ஏற்படுத்தப்பட்டது. இதனால், பெண் வீட்டார்க்குச் செலவும், பிராமணருள்ளிட்ட பிறர்க்கு வரவும் ஏற்பட்டன. தாலி என்னும் மங்கல அணி தன் சிறப்பியல்பை இழந்தது. மகளிர் பூப்படையுமுன் செய்யப்படும் தாலிகட்டு என்னும் மணவினை நாளடைவில் பொருளற்றுப் போய்விட்டதனால், அவர் பூப்படைந்த பின் மீண்டும் ஒரு மணவினை (ஆயின், உண்மையான திருமணம்) நடைபெற லாயிற்று. இது சம்பந்தம் என்னும் வடசொற் பெயரால் வழங்கி வருகின்றது. இங்ஙனம் மணவினை இரண்டாயிற்று#

## தாலிகட்டு

தாலிகட்டு என்னும் மணவினையைப்பற்றி, திரு.(K.R.) கிருட்டிண மேனன் கூறிய சான்றியமாக 1894-ஆம் ஆட்டை மலபார் மணவிடைக்குழு (Malabar Marriage Commission) அறிக்கையில், வரைந்திருப்பதாவது:-

---

# இற்றைத் தமிழ் நாடாகிய சோழபாண்டி நாடுகளிலும், மணவுறவு சம்பந்தம் என்றும், உறவாடி சம்பந்தி என்றும், வட சொல்லால் அழைக்கப்பெறுதல் காண்க. ஆயின், சம்பந்தங் கலப்பவர், தமிழ்நாட்டில் மணமக்களின் பெற்றோராகவும், மலையாள நாட்டில் மணமகனாகவும், கருதப்பெறுவர்.

"தாலிகட்டுக் கலியாணம் என்பது, ஒரு வகையில், மற்ற மாவட்டங் களில் ஒரு தேவகணிகை (தேவதாசி) அவள் தொழிலைத் தொடங்குமுன், அவட்குச் செய்யப்படும் சடங்கை ஒத்ததாகும். அரசகுடும்பங்களிலும் சில இடைப்பிரபுக்கள் குடும்பங்களிலும் ஒரு சத்திரியன், அல்லது சரணப்பிரிவில் ஒரு நெடுங்காடி, குறிக்கப்பட்ட மங்கலவேளையில் பெண் வீட்டிற்கு அழைக்கப்பட்டுவந்து, நண்பர் முன்பும் குலத்தார் முன்பும் பெண் கழுத்தில் தாலியைக் கட்டிவிட்டு, அதற்குரிய கூலியை வாங்கிக்கொண்டு போய்விடுகின்றான். மற்றப் பிரிவுகளில், பெண்ணின் பிறப்பியம் (சாதகம்) அவளுடைய இனங்கள் குடும்பத்துப் பையன்களின் பிறப்பியங்களோடு ஒப்பு நோக்கப்பட்டு, ஒத்த பிறப்பியத்திற்குரிய பையன் தாலிகட்டத் தகுந்தவனாகக் குறிக்கப்படுகின்றான். தாலிகட்டக் கணியனால் ஒருநாள் குறிக் கப்படுகின்றது. பையனின் குடும்பத்துக் கரணவனுக்குச் செய்தியை தெரிவிக்கின்றனர். பையனுக்கு அயினியூண் என்றொரு விருந்து அளிக்கப்படுகின்றது. அதிலிருந்து அவன் மணவாளன் அல்லது பிள்ளை என அழைக்கப்படுகின்றான். மணவாளனுக்கு விருந்து நடந்த வீட்டிலிருந்து ஓர் ஊர்வலம் புறப்படுகின்றது. வாளும் கேடகமும் தாங்கிய ஆடவர், ஒருவகைப் போர்க்கூச்சலிட்டுக்கொண்டு ஊர்வலத்தின் முன் செல்கின்றனர். இந்தச்சமையத்தில் பெண் வீட்டிலிருந்தும் இத்தகைய ஆடவரொடும் இத்தகைய கூச்சலொடும் ஓர் ஊர்வலம் கிளம்புகின்றது. பெண்ணின் தரவாட்டைச்சேர்ந்த ஒருவன் ஊர்வலத்தின் முன்வந்து, மணவாளனை எதிர்கொண்டு பெண் வீட்டிற்கு அழைத்துச் செல்கின்றான். அங்கே, பெண்ணின் உடன் பிறந்தான் அவன் பாதங்களைக் கழுவி, ஓர் இணை வேட்டியைப் பெற்றுக்கொள்கின்றான். பின்பு மணவாளனை, மூங்கிற்பாயும் சமுக்காளமும், வெள்ளைத்துணியும் விரித்துள்ள பந்தலின் நடுவிடத்திற்குக் கொண்டுபோய் இருத்துகின்றனர். அதன் பின், பெண்ணின் உடன்பிறந்தான் அவளை வீட்டிற்குள்ளிருந்து தூக்கிக்கொண்டு வந்து, மும்முறை பந்தலை வலம்வந்து மணவாளனின் இடப்புறத்தில் விட்டுவிடுகின்றான். அன்று பெண்ணின் தந்தை கம்பளியிற் கட்டப்பட்ட புத்தாடைகளை, இருவர்க்கும் அளிக்கின்றான். இருவரும், மந்திரவடி என்னும் அப்புத்தாடைகளை அணிந்து கொள்கின்றனர். பின்பு, பெண்ணின் தரவாட்டுக் கரணவன் மனைவி,

அதே குலத்தினளாயிருப்பின், பெண்ணைச் சிலம்பு முதலிய அணிகளால் அலங்கரிக்கின்றாள். அதன் பின் இளையாத்து என்னும் ஒரு தாழ்ந்த பிராமண வகுப்பைச் சேர்ந்த புரோகிதன், தாலியை மணவாளனிடம் கொடுக்கின்றான். குடும்பக் கணியன் முழுத்தம் (முகூர்த்தம்) என்று கத்துகின்றான். மணவாளன் தன் வாளை மடியிலிட்டு, தாலியைப் பெண்ணின் கழுத்திற் கட்டுகின்றான். அன்று பெண் ஓர் அம்பையும் ஒரு முகக்கண்ணாடியையும் கையிற் பிடித்துக் கொண்டிருக்கின்றாள். செல்வக்குடும்பங்களில், ஒரு பிராமணி மணமக்களை வாழ்த்திச் சில பாட்டுப்பாடுகின்றாள். அவளை அமர்த்த முடியாத எளிய குடும்பங்களில், பாட்டில் தேர்ச்சி பெற்ற ஒரு நாயன் அப்பணியை ஆற்றுகின்றான். பின்பு இனங்கர் மணவாள னையும் பெண்ணையும், வீட்டிற்குள் சுவடிக்கப்பட்ட ஓர் அறைக்குத் தூக்கிக்கொண்டு போகின்றனர். அங்கே அவர்கள் ஒரு வகைத் தீட்டு நிலையில் முந்நாளைக் கழிக்கின்றனர். நாலாம் நாள், இருவரும், அருகிலுள்ள நீர்நிலையில், ஒருவர் கைகளை ஒருவர் பிடித்துக் கொண்டு நீராடுகின்றனர். நீராடி ஆடைமாற்றியபின், ஊர்வலத்தின் பின்னாக வீடு திரும்புகின்றனர். மேளதாளமும் யானைகளும் ஊர்வலத்தில் வழக்கமாக வைக்கப்படுகின்றன. மஞ்சள்நீர் தெளிக்கப் படுகின்றது. வீடுவந்து சேரும்போது, எல்லாக் கதவுகளும் சாத்தப்பட் டிருக்கின்றன. மணவாளன் அவற்றை வலிந்து தள்ளித் திறந்து, வீட்டிற்குள் புகுந்து வடக்குச் சிறகில் அமர்கின்றான். பெண்ணின் அத்தையும் தோழிமாரும் மணமக்களை அணுகி அவர்கட்குத் தித்திப்புப் பண்டங்களைத் தருகின்றனர். பெண் மணவாளனுக்குச் சோறு படைக்கின்றாள். இருவரும் ஓரிலையில் உண்டபின் பந்தலுக் குச் செல்கின்றனர். அங்கே ஒரு துணி இரண்டாகக் கிழிக்கப்பட்டு, ஒரு பாதி மணவாளனுக்கும் ஒரு பாதி பெண்ணிற்குமாக, இனங்கர் முன்பும் நண்பர் முன்பும் வேறு வேறு கொடுக்கப்படுகின்றது. துணிகிழிப்பு தீர்வை (Divorce) செய்துவிட்டதாகக் குறிப்பது போலக் கருதப் படுகின்றது". என்பது.

இச்சான்றியத்திற் கூறப்பட்டுள்ள பருப்பொருட் செய்திகள் மலையாள நாட்டிற்கெல்லாம் பொதுவேனும், நுண்பொருட் செய்திகள் அவ்வவ் இடத்திற்கும் அவரவர் செல்வ நிலைக்கும் ஏற்ப வேறுபட்டவையாகும். மணவாளன் ஒத்த குலத்தானாகவும்

இளைஞனாகவுமே யிருக்கவேண்டுமென்பதில்லை; மூத்தவனாகவும் பிராமண னாகவுமிருக்கலாம். ஒருவனே ஒரே சமையத்திலோ வெவ்வேறு சமையத்திலோ பல பெண்களுக்குத் தாலி கட்டலாம். பெண் நாலாம்நாள் தாலியைக் கழற்றிவிடலாம். பெண்ணிற்கு மணவாளனொடு பொதுவாய்த் தொடர்பில்லாதுபோயினும், அவன் இறந்தபின் தீட்டுக் கழிப்பது வழக்கம். சிலவிடத்து மணவாளனே கணவனாவதுமுண்டு. அந்நிலைமை தாலிகட்டன்றே முடிவு செய்யப்பட்டிருக்கும். சிக்கனத்திற்காகப் பத்தாண்டு அல்லது பன்னீராண்டிற்கொருமுறை, பல தாலிகட்டுக்களைத் தொகுதியாக நடத்துவது வழக்கம். அதுவும் இயலாத எளிய தாய்மார், தெய்வச் சிலையையோ வாளையோ மணவாளனாகக் கொண்டு, தாமே தம் மகளிர்க்குத் தாலி கட்டுவதுண்டு. பதினோராண்டு நிரம்புமுன் தாலி கட்டப்பட்டுவிடும். சிலர் ஓராட்டைப் பெண்ணிற்குக் கட்டுவது முண்டு. பொதுவாக, தாலிகட்டு திருமணத்தோடு தொடர்பற்ற தனிச்சடங்காகவே செய்யப்படும் ‡

இங்ஙனம் இது பொருத்தமற்ற சடங்காயினும், கோவிலகம் என்னும் அரண்மனைகளிலும் பெரிய நாயர் இல்லங்களிலும், ஆயிரம் பிராமணரை உண்பிப்பதும் பத்தாயிரம் பதினாயிரம் உருபா பண்டைநாட்களிலேயே செலவழிப்பதும் உண்டு.

### சம்பந்தம்

மகளிர் பூப்படைந்தபின் செய்யப்படும் உண்மையான திருமண மாகிய சம்பந்தம், வியப்பிற்கும் அறிவேட்கைக்கும் உரியதாகாமையின், விரிவாக விளக்கப்பட வேண்டுவதன்று. பிராமணர் சம்பந்தம் என்னும் ஒரே வடசொல்லை ஆண்டுவரினும், நாயரிடையே, புடமுறி அல்லது புடவைக் கொடை, ஊழம் பொறுக்குகை (முறைவரும்வரை காத்திருத்தல்), வீடாரம் கயறுகை (மனைவியின் வீடு புகுதல்),

---

‡ சோழபாண்டி நாடுகளில், கார்காத்தார் குலத்தில், ஒரு பெண்ணின் பேதை அல்லது பெதும்பைப் பருவத்தில் ஒருநாள் அவள் அம்மான் குதைச்சுமணி என்னும் ஒரு பொற் பிறையை அவள் கழுத்தில் கட்டுவதுண்டென்றும், அது விளக்குத்திருநாள் எனப்படும் என்றும், அம்மணி அன்றே கழற்றப்படுமென்றும், அண்ணாமலைப் பல்கலைத் தமிழ் ஆராய்ச்சித் துறையைச் சார்ந்த புலவர் (S.) தண்டபாணி தேசிகர் கூறுவர்.

கிடக்கறை (பள்ளியறை)க் கலியாணம், முதலியனவாக வெவ்வேறு தமிழ்ப் பெயர்கள் ஆங்காங்கு வழங்கி வருகின்றன. இப்பெயர்கள் இடவேறுபாடு மட்டுமன்று, வகை வேறுபாடும் பற்றியனவாகும். நாயர் திருமணவகைகளுள் மிகுந்த செலவானது புடமுறி என்பதே. இவ்வகைப்படி திருமணம் செய்த கணவனே, தன் மனைவியைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்ல முடியும். ஏனைவகைப்படி செய்தவரெல்லாம், மனைவி வீட்டிற்கே சென்றுவரல் வேண்டும். முதலில் வேறுவகையால் மணந்தவன் பின்பு செல்வ நிலையுயர்ந்த பின் புடமுறி வகையுஞ்செய்து தன் மனைவியைத் தன் இல்லத்திற்கு அழைத்துக் கொள்ளலாம். இது பல பிள்ளைகள் பிறந்தபின் நிகழ்வதுமுண்டு.

எல்லாத் திருமண வகைகட்கும் பொதுவான நிகழ்ச்சிகள், மணமக்களின் பிறப்பியம் பார்த்தல், மணவுறுதிப்பேச்சு, முழுத்தங் குறித்தல், மணவிழாக் கொண்டாட்டம், கரணம், பிராமணர்க்குத் தானம், திருமணவிருந்து, மணமக்கள் கூட்டம், என்பனவாகும்.

**பல்கணவம்**

சேரர் மரபு அற்றுப்போய்ச் சேர நாட்டிற்குச் சோழ பாண்டி நாட்டொடு தொடர்பு நீங்கியதிலிருந்து, பதினெட்டாம் நூற்றாண்டு வரை, நாயர் குலத்திற் பல்கணவம் கையாளப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது.

திப்பு சுல்தான், 1788-ஆம் ஆண்டில், இன்று கள்ளிக் கோட்டை எனத் தமிழ் நாட்டில் வழங்கும் கோழிக்கோட்டிற்குச் சென்றிருந்த போது, நாயர்குலப் பல்கணவத்தைக் கண்டித்துப் பின்வருமாறு ஒரு கட்டளை யறிக்கை பிறப்பித்ததாகச் சொல்லப்படுகின்றது.

"ஒருத்தி பத்து ஆடவரொடு கூடி வாழ்தல் உங்களிடை வழக்கமாகையாலும், உங்கள் தாய்மாரையும் உடன் பிறந்தாள் மாரையும் அவர்கள் கெட்ட பழக்கங்களிற் கட்டுப்பாடின்றி நீங்கள் விட்டுவிடுவதாலும், உங்கள் மணவுறவுகளில் வெளிநிலத்து விலங்குகளினும் நாணமின்றி நடந்து கொள்வதாலும் இக்கரிசான பழக்கங்களை விட்டு விட்டு ஏனை மக்களைப்போல் நீங்கள் வாழவேண்டுமென்று, இதனால் தெரிவிக்கின்றேன்".*

* தென்னிந்திய குலங்களும் மரபுகளும் (Castes and Tribes of Southern India) பக். 311

பல்கணவ முறைப்படி, இடைக்காலத்தில் ஒவ்வொரு நாயத்தியும், இருவர் முதல் பன்னிருவர்வரை பல கணவரொடு கூடி வாழ்ந்தாள். ஒவ்வொரு கணவனும், மணந்த வரிசைப்படி முறைகொண்டு, ஒப்பந்தத்திற்கேற்ப ஒரு நாளோ பலநாளோ தன் நாயத்தியொடு கூடியிருப்பான். ஒரு நண்பகலிலிருந்து மற்றொரு நண்பகல்வரை ஒரு நாட்கணக்காகும். ஒரு கணவன் வீட்டிற்குள் ளிருக்கும்போது மற்றொரு கணவன் புகுவதில்லை. ஒருவன் வீட்டிற் குள்ளிருக்கிறான் என்பதற்கு, அவன் வாயிலருகே விட்டுவைத்திருக்கும் வாளும் கேடகமும் அடையாளம். ஒவ்வொருவனும் தன் நாயத்தி யொடு கூடியிருக்குங் காலத்தில், அவள் வாழ்க்கைச் செலவைத்தருதல் வேண்டும். ஒரு பிள்ளை பிறப்பின் அதற்குத் தந்தையைக் குறிப்பது நாயத்தியே. பிள்ளைகட்குத் தாயோடன்றித் தந்தையொடு தொடர் பில்லை. அவர்கட்கு அம்மான் சொத்தே உரிமையாகும். ஒரு நாயத்தி எந்தச் சமையத்திலும் ஒரு கணவனைத் தள்ளிவிடலாம். இத்தள்ளுதல் உரிமை கணவனுக்குமுண்டு. புதுவுறவு கொள்ளும் உரிமையும் இருவர்க்கும் பொதுவாம்.

### முன்னுகர்ச்சி (Prelibation)

நம்பூதிரிப் பிராமணர், இடைக்காலத்தில், நாயத்திமாரைத் தாராளமாய்ப் பெண்டாள்வதற்கு மட்டுமின்றி, அவரை முதலில் நுகர்தற்கும் வழிவகுத்திருந்ததாகத் தெரிகின்றது.

ஆமில்தன் (Hamilton) என்பவர், தம் 'கிழக்கிந்திய தீவுகளின் புது வரலாறு' (New Account of the East Indies) என்னும் நூலில், பின்வருமாறு வரைந்திருகின்றார்

சாமொரின் (Zamorin) மணக்கும்போது, மணமகளை நம்பூதிரி அல்லது தலைமைப் புரோகிதன் நுகரும்வரை, முந்நாள் அவளொடு கூடக்கூடாது. நம்பூதிரி தன் விருப்பப்படி, அவளோடு முந்நாள் கூடலாம். ஏனெனின், முதனுகர்ச்சி அவளது தெய்வத்திற்குத் திருக்காணிக்கையாகப் படைக்கப்படல் வேண்டும்".*

---

* தென்னிந்தியக் குலங்களும் மரபுகளும் பக்.326

மலபார் மணவிடைக் குழுவுறுப்பினரான விந்தர் பாதம் Winterbotham) என்பவர், தாலிகட்டு வினையைப் பிராமணன் புரிவது, முன் காலத்தில் நம்பூதிரிமார் பெற்றிருந்த முதனுகர்ச்சியுரிமையின் எச்சக்குறி என்று கொள்வர். நம்பூதிரிமாராற் பெண்மை தொடங்கி வைக்கப் பெறுவது, நாயத்திமாரின் சிறந்த பேறென்று கருதப்பட்டது.*

இதனை உட்கொண்டே, "கரணத்தினமைந்து முடிந்த காலை" என்னும் கற்பியல் நூற்பாவின் (5) இரு தொடர்க்கட்கு, நச்சினார்க்கினியர் பின்வருமாறு நலிந்தும் வலிந்தும் நச்சுத்தன்மையான உரை வரைந்திருக்கின்றனர்.

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை- ஆதிக்கரணமும் ஐயர்யாத்த கரணமுமென்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறை பாடின்றாய் மூன்று இரவின் முயக்கம் இன்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையாற்பள்ளி செய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்த காலத்து:

"ஆன்றோராவார், மதியுங் கந்தவரும் அங்கியும்.

"நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும் - களவிற் புணர்ச்சிபோலுங் கற்பினும் மூன்றுநாளுங் கூட்டமின்மை யானும் நிகழ்ந்த மனக்குறை தீரக்கூடிய கூட்டத்தின் கண்ணும்:

"அது நாலாம் நாளை யிரவின் கண்ணதாம்,

"அல்லல்தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும் - வரைந்த காலத்து மூன்று நாட்கூட்டமின்மைக்குக் காரண மென்னென்று, தலைவிமனத்து நிகழா நின்ற வருத்தந்தீரும்படி மிக்க வேட்கையோடு கூடியிருந்து, வேதஞ் சொல்லுதலுற்ற பொருளின் கண்ணும்: தலைவன் விரித்து விளங்கக்கூறும்.

"அது முதனாள் தண்கதிர்ச் செல்வற்கும், இடைநாள் கந்தருவர்க்கும், பின்னாள் அங்கியங் கடவுட்கும் அளித்து, நான்காநாள் அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகரவேண்டிற்று;

* தென்னிந்தியக் குலங்களும் மரபுகளும் பக்.326

அங்ஙனம் வேதங் கூறுதலால் எனத் தலைவிக்கு விளங்கக் கூறுதல். உதாரணம் இக்காலத்தின்று".

இங்குக் கூறியவாற்றால், நம்பூதிரிமார் மதியாழோர் தீயின் பெயரால் செய்து வந்த ஏமாற்றைக் கண்டுகொள்க. (இனங்கன்- ஒத்தவன், முறைகாரன், கரணவன் - நாயர் குடும்பத் தலைவன்).

**குறிப்பு:-** 'மலையாளநாட்டு மணமுறை'என்னும் இப்பின் னிணைப்பிற் கூறியவெல்லாம், 'தென்னிந்தியக் குலங்களும் மரபுகளும்'என்னும் நூலினின்று கொண்டு கூறியவாகும். அந்நூல் இந்நூற்றாண்டுத் தொடக்கத்தில் தொகுக்கப்பெற்றதாதலின், அதிற் கூறப்பட்டுள்ள பல செய்திகள் இன்று பழங்கதையாய்ப்போயின. மலையாள நாடு இன்று கல்வியிலும் கைவினையிலும் தலை சிறந்து விளங்குகின்றது. நாயர் குலப் பெருமக்களும், தன்மானவுணர்ச்சி பொங்கிப் பிராமணியத்தை எதிர்த்து, நாகரிகப் பண்பாட்டுடன் வாழ்ந்து வருகின்றனர். தாலி கட்டு அருகியும், மருமக்கட்டாயம் மக்கட்டாயமாக மாறியும், வருகின்றன.

## அரசியலார் கவனிக்க வேண்டியவை :

(1) கலப்புமணஞ் செய்வார்க்கு, மணச்செலவு முழுவதையுமேனும் அதில் ஒரு பகுதியையேனும் ஏற்றுக் கொள்ளுதலும்,

(2) அவர்க்கு மண முடிந்தவுடன் அவர் தகுதிக் கேற்ப அரசியல் அலுவலளித்தலும்,

(3) அவர் பெறும் மக்கட்குப் படிப்புதவி செய்தலும் ஆகும்.

நூல் கிடைக்குமிடம் :

**திருவள்ளுவர் தவச்சாலை**
திருவளர்குடி (அல்லூர்)
திருச்சிராப்பள்ளி மாவட்டம்-620 101.